*Kumaraṉ*
*Āram 24, muttu 5*
*September 19, 1946*

Record no. 313

REGD· NO· M· 1823· 10 பக்கங்கள் மலாயாவில் 12-காசு இந்தியாவில் 2-அணா

விளம்பரம்

நோட்டீஸ் கோர்ட் விளம்பரம் முதலிய வைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0

வியாபார சம்பந்த மானது ரூ. 1-8-0

ஒப்பந்த விளம்பரத் திக்கு மானேஜருக் கெழுதவும்

# குமரன்

சந்தா விபரம்

உள் நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 6-0-0

ஆறு மாதம் ரூ. 3-8-0

சிலோன் ரூ. 6-0-0

பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒரு 1-க்கு ரூ. 8-0-0

வியாழன் தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 24 | மகளிர் இல்லம், விய புரட்டாசி 3உ. (19—9—46) | முத்து 5

## அழகு

முரு சேதுராமன்

வானத்திலும் வையத்திலும் எங்கு பார்த்தாலும் நிரம்பிக் கிடக்கும் லாகிரிச் சுவையோடு கூடிய லாவண்யங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. ஆனால் அவைகளைக்கண்டு, அவைகளோடு குலாவி அநுபவிக்கும் காதல் நெஞ்சமும், கற்பனை விரிவும், கவிதை உள்ளமும் சிலருக்கே உண்டு. எனினும் உறங்கிக்கிடக்கும் இயற்கையின் அழகுச் சித்திரங்கள் உயிர் பெற்று, மக்களுடைய மதி முகத்திலே தாண்டவமாடும்போது, அதை யாவரும் போற்றுகின்றனர். அதிலும் ஒரு கவிஞன் அதனைக்கண்டு விடுவானாயின், அவனை அறியாமல் அழகுக் கவிதைகள் ஆயிரக்கணக்கில் பொங்கிக் குதிக்க ஆரம்பித்துவிடும். கவிகள் தான் அழகை அநுபவித்துக் காட்டுகிறார்கள். கவிஞர்களின் இதயங்களிலேதான் பூரணமான அழகுக்கடலைக் காணுகின்றோம்.

சுந்தர மூர்த்தி நாயனார் பரவையாரைப்பார்க்கின்றார். அம்மங்கையின் பொங்கு பேரழகையும் அங்க நலங்களையும் நாமும் பார்ப்போம்:-

"கற்பகத்தின் பூங்கொம்போ!
காமன் தன் பெருவாழ்வோ!
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ! புயல் சுமந்து
விற்தவளை பவளமலர்
மதி பூத்த விரைக்கொடியோ!
அற்புதமோ! சிவன் அருளோ!
அறியேன் என்று அதிசயித்தார்"

கற்பகத்தின் பூங்கொம்பாகக் காட்சி அளிக்கிறாள். காமராஜனது கவினிய வாழ்வே ஓர் உருவெடுத்தாற் போன்று ஒளிர்கிறாள். பரவையின் அற்புத அழகிலே ஈடுபட்ட உள்ளம், இறுதியில் "அறியேன்!" என்று அதிசயிக்கிறது.

எழுதரிய எழில் வாய்ந்த சீதையைச் சூர்ப்பனகை காணுகிறாள். அரக்கியின் பாழ்பட்ட நெஞ்சம், சீதையின் அழகில் அப்படியே ஈடுபடுகிறது. நோக்க நோக்கத் தெவிட்டாத அந்த அழகிலே லயித்த உள்ளம்; "பெண்மை உள்ளம்" என்ன எண்ணுகிறது?:-

"பண்புற நெடிது நோக்கிப் படைக்குநர் [சிறுமை அல்லால்
எண்பிறங்கு அழகிற்கு எல்லை இல்லையாம் என்ன நின்றாள்
கண்பிற பொருளில் செல்லா கருத்தெனின் அஃதே கண்ட
பெண் பிறந்தேனுக் கென்றால் என் படும் பிறருக் கென்றாள்!"

சூர்ப்பணகை சீதையைக் கண்டாள் அழகைப்பற்றிஒருதீர்மானம் கொண்டாள், என்ன? "அழகுக்கு எல்லையே இல்லை!" இவ்வளவு வரம்பில்லாத அழகுச் செல்வத்தை வைத்துக்கொண்டு தானே படைப்புக்கடவுள், தன்னைப் போன்றவர்கள் விஷயத்தில் வாரி வழங்க மனமின்றி, பரம லோபியாக நடந்துகொண்டிருக்கிறான்! சிருஷ்டி கர்த்தாவின் சிறுமையைத்தான் என்னென்பது! என எண்ணமிடும் சூர்ப்பணகை, "பெண்ணாகப்பிறந்த எனக்கே இவ்வாறானால், பிறர் கதி என்னாகும்? என ஆடவர்களுக்காக இரங்கிக் கவலைப்படுகிறாள். அவளது கண்ணும் மனமும் வேறு பொருள்களைக் காண மறுக்கின்றன. அந்த அழகிலே மேலும் மேலும் திளைத்து அதிலேயே அழுந்துகின்றன;

பின்னர் அண்ணன் இராவணனிடத்திலே அழகி சீதையை வருணிக்கிறாள். காதல் என்னும் கடுநெருப்பை மூட்டுகிறாள். பொன்போன்ற மேனியும், மின் போன்ற இடையும் அமைந்த அவ்வழகியின்,

"தோளையே சொல்லு கேனோ?
சுடர்முகத்துலாவுகின்ற
வாளையே சொல்லுகேனோ?
அல்லவை வழுத்து கேனோ?
மீளவும் திகைப்பதல்லால்
தனித்தனி விளம்பலாற்றேன்
நாளையே காண்டியன்றே
நானுனக் குரைப்பதென்னோ?"

அம்மங்கையின் தோள் அழகைச் சொல்லுவேனோ? அல்லது வாள் போன்ற அவளின் விழி அழகைச் சொல்லுவனோ? நலமெல்லாம் ஒருங்கே திரண்டுவந்த அந்நங்கையின் அங்க நலங்களைத் தனித்தனியே விளம்ப இயலாது என்மனம் திகைக்கின்றது. ஒப்பற்ற மங்கையின் அங்க நலங்களை எப்படி உவமித்து உரைப்பேன்?

"வில்லொக்கு நுதலென்றாலும்
வேலொக்கும் விழி என்றாலும்
பல்லொக்கு முத் தென்றாலும்
பவளத்தை இதழென்றாலும்
சொல்லொக்கும் பொருள் ஒவ்வாதால்
சொல்லலாம் உவமை உண்டோ?
நெல்லொக்கும் புல்லென்றாலும்
நேருரைத் தாக வற்றே!"

அம்மங்கையின் நுதல் வில்லை ஒக்குமென்றும், விழிகள் வேலை ஒக்குமென்றும், பல் முத்தை ஒக்குமென்றும் இதழ் பவளத்தை ஒக்குமென்றும் இணை கூறினும் பொருந்தாதென்றால் வேறு எப்பொருள் கொண்டு உவமிப்பேன்? சூர்ப்பணகையின் கூற்றிலே சீதையின் பேரழகினைத் தெளிவாக அறிகிறோம்.

அது சுயம்வர மண்டபம். அங்கு தமயந்தி எப்போது வருவாளோ என்று மன்னர்களெல்லாம் மண்டபத்தையே நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட மண்டபத்தை "மன்னர் விழித்தாமரை பூத்த மண்டபம்" என்கிறார் புலவர். அத்தனை விழித்தாமரைகளும் பூத்திருக்கும் அத்தடாகத்திலே, அன்னம்போல அடியிட்டு அழகி தமயந்தி பிரவேசிக்கிறாள்:—

"மன்னர் விழித்தா மரை பூத்த மண்டபத்தே
பொன்னின். மடப்பாவை போய்ப் [புக்காள்—மென்றத்துச்
செய்தாள் வெள்ளைச் சிறைஅன்னம் [செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று"

தமயந்தியின் மேனி அழகும், இளமை ஒளியும், பார்ப்பவர் கண்ணைப் பறிக்கின்றன. "பொன்னின் மடப்பாவை" யிடத்தே நிறைந்திருக்கும் அழகிலே மன்னர்களெல்லாம் ஈடுபட்டிருப்பதில் எவ்வித வியப்பும் இல்லை அல்லவா?

---

### கலைமகள் வித்தியாசாலை

பி. அளகாபுரி கலைமகள் வித்தியாசாலையின் ஒன்பதாம் ஆண்டு நிறைவு விழா 6-9-46 மாலை 5 மணிக்கு புதுக்கோட்டை சமஸ்தான திவான் பேஷ்கார் அண்டு சீப் மாஜிஸ்திரேட் திரு. எஸ். வெங்கடேஸ்வரய்யர் அவர்கள் தலைமையில் கொண்டாடப் பெற்றது. மாணவ மாணவிகளின் சொற்பொழிவு, சம்பாஷணை, நடிப்பு முதலியன நடைபெற்றன. புதுக்கோட்டை தமிழ்ப் பேராசிரியர் திரு. என். கனகராஜய்யரவர்கள் "மக்கட் செல்வம்" என்பது பற்றியும் இவ்வூர் ஆசிரியை திருமதி. இராஜம்மாள் "கற்பின் மேன்மை" என்பது பற்றியும் பேசினார்கள். மானேஜர் திரு. வி. குப்புசாமி ஐயரவர்கள் உடற் பயிற்சி முறைகளைச் செய்து காட்டினார்கள். தலைவரவர்கள் குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கி, முடிவுரை கூறியதும் கூட்டம் முடிந்தது.

# நாடெங்கும் பாரதி விழா

—|●|—

காரைக்குடி

புதன்கிழமை 11-9-46 காலை 7 மணிக்கு காங்கிரஸ் மாளிகையில் கொடி வணக்கம் நடந்த பின் யானை மேல் பாரதி படம் வைத்து தேசீயக் கொடியுடன் ஊர்வலம் நடைபெற்றது. பின்பு 9 மணிக்கு பாரதி பாட்டுப் போட்டி நடைபெற்றது. போட்டியில் மாணவ மாணவிகள் கலந்து கொண்டனர். இவ்விழாவில் பல சங்கங்களும் ஒத்துழைத்தன.

அன்று ஸ்ரீமீனாட்சி சுந்தரேசுவர வித்தியாசாலையில் பாரதி பாட்டுப் போட்டி நடைபெற்று மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன.

கண்டவராயன்பட்டி

15-9-46 அன்று மாலை 4மணிக்கு இவ்வூர் பணிச்சாருடையவர் தர்ம கலாசாலையில் கவிச்சக்கரவர்த்தி சுப்பிரமணிய பாரதியாரின் 25-வது நினைவு விழா வைபவம் குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பா அவர்கள் தலைமையில் மிக விமரிசையாக நடைபெற்றது.

விழாத்தலைவரைக் கலாசாலை ஸ்தாபகர் திரு. சி. உ. ராம ராமசாமி செட்டியார் அவர்கள் இல்லத்திலிருந்து பெற்றோர் சங்கத் தலைவர் திரு. கரு. நா. லெ. லெட்சுமணன் செட்டியாரவர்களும் மற்றும் பல பிரமுகர்களும் மாலை அணிவித்து மிகக் குதூகலமாகக் கலாசாலைக்கு அழைத்து வந்து கடவுள் வணக்கம் செலுத்தி மாணவிகள் வரவேற்புப் பாடல்களும், ஸ்தாபகராலும், பழைய மாணவ சங்கத்தாராலும் உபசாரப் பத்திரங்கள் வாசித்தளித்தலும் நடைபெற்றன. பின்னர் மாணவர் சம்பாஷணை, மாணவிகள் கும்மி செல்வன் மு. வீரபாண்டியன் செல்வன் பழ. விவேகானந்தன், மகளிர் இல்லம் பெண்பாடசாலை மாணவி செல்வி, சௌந்தரவல்லி ஆகியோர்களின் பாரதி கீதமும், திரு. ஞா. பழநியப்பன், திரு. சோம. திருநாவுக்கரசு, ஆனரரி மாஜிஸ்ட்ரேட் திருமதி. மு. மரகதவல்லி அம்மாள், ஆவினிப்பட்டி, திரு. மூரு. சேதுராமன் ஆகியோரின் சொற்பெருக்கும் நடைபெற்றன.

விழாவின் ஞாபகார்த்தமாகக் குழந்தைகளுக்குப் பரிசும் ஏழைக் குழந்தைகளுக்கு வகுப்புப் புத்தகங்களும் வழங்கப் பெற்றதோடு இன்னும் குழந்தைகளின் முன்னேற்றத்திற்கு ஸ்தாபகர் திரு. சி. உ. ராம. ராமசாமி செட்டியார் சித்தமாயிருப்பதாகத் தெரிவிக்கப்பட்டு, தலைவர் முடிவுரைக்குப்பின் தலைமை ஆசிரியரால் வந்தனோபசாரம் கூறப்பட்டு மணி 8.30 க்கு கூட்டம் இனிது முடிந்தது.

அரிமழம்

ஆவணித் திங்கள் 27ம் நாள் அரிமழம் இலக்கிய வளர்ச்சிக் கழகச் சார்பில் பாரதிவிழா மிகச்சிறப்பாக கொண்டாடப்பட்டது. காலை 10 மணிக்கு பாரதி பாடல் போட்டி நடைபெற்றது. மாலை 4 மணிக்கு மகா கவி பாரதியாரின் திருவுருவப் படத்தை அலங்கரிக்கப் பெற்ற ரதத்தில் ஊர்வலமாக வந்து மாலை 5 மணிக்கு சிவன்கோவில் அங்கயற்கண்ணி மண்டபத்தில் புதுக்கோட்டை மகளிர் கல்லூரித் தமிழாசிரியர் வித்வான் திரு. விசு. திருநாவுக்கரசுச் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார். அவ்வமயம் கரு. நாச்சியப்பன், கோ. வெங்கிடுசாமி ராஜு, முருகு. சுப்பிரமணியம், அ. சம்பந்தம் செட்டியார், ராம. கோவிந்தன் செட்டியார், லக்ஷ்மி நாராயண அய்யர், செ. முருகப்பன் முதலியோர் சொற்பொழி வாற்றினார்கள். இரவு 9 மணிக்கு தமிழ்த் தாய் வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

சோக்கனுத்புரம்

11-9-46 மாலை 5 மணிக்கு செந்தமிழ்க்கழகத்தில் தேசியக்கவி சுப்பிரமணிய பாரதியாரின் தினம் திரு. அ. மு. கருணையானந்தா அவர்கள் தலைமையில் வெகு விமரிசையாக நடைபெற்றது. தலைவர் முன்னுரைக்குப்பின் திரு வெ. இராமச்சந்திரன், திரு. வ. நாச்சியப்பன், திரு. ச. தெய்வநாயகம், திரு. மெ. மாணிக்கம், திரு இராம. மெய்யப்பா, திரு. சொ. இராமநாதன், திரு. மெ. காசிவிஸ்வநாதன் திரு பழ. உத்தமன் முதலியவர்கள் பாரதியாரின் வாழ்க்கை வரலாறு பற்றியும் பாடல்கள் பற்றியும் மிக விரிவாகவும் அழகாகவும் சொற்பெருக்காற்றினார்கள். தலைவர் முடிவுரைக்குப்பின் செயலாளர் நன்றி கவில கூட்டம் இனிதே நிறைவெய்தியது.

நற்சாந்துபட்டி

செப் 14-பொற்கால நூல் நிலையத்தாரால் தேசியக்கவி சுப்பிரமணிய பாரதியாரின் திருவுருவப் படத்தை அலங்காரம் செய்து தொண்டர்களுடன் ஊர்வலமாக நேதாஜிமைதானத்திற்கு வந்தது. பாரதியார்பாட்டுப் போட்டியில் பரிசு பெற்ற புவனம் சுலோசனா, அழகப்பன், ஜானகி முதலியவர்களுக்கு நற்சாந்துபட்டி கிராமப் பஞ்சாயத்துப் போர்டு பிரசிடெண்டு திரு, நல்லகருப்பன் செட்டியாரவர்களால் பரிசு வழங்கப்பட்டது. பின்னர் திரு சக்திமோஹன் தலைமையில் G. கிருஷ்ணமூர்த்தி, குரா G. சுவாமிநாதய்யர், மு. சுப்பையா, R. கிருஷ்ணமூர்த்தி நா. மாணிக்கம், முதலியவர்கள் பாரதியாரைப் பற்றி சொற்பொழி வாற்றினார்கள். தலைவரவர்களும் கவிச்சக்கரவர்த்தியைப் பற்றி மிக விரிவாக சொற்பொழி வாற்றினார்கள். திரு. முத்து சுப்பையர் அவர்கள் கிராமக் காங்கிரஸ் கமிட்டி சார்பாகவும் பொற்கால நூல் நிலையத்தார் சார்பாகவும் வந்தனோபசாரம் கூற கூட்டம் இனிது முடிந்தது.

ஆத்தங்குடி

ஆத்தங்குடியில் நேரு சிறுவர் கழகத்தில் செப்டம்பர் 11உ ஊர்வலத்துடன் வெகு விமரிசையாக, பாரதி விழாக் கொண்டாடப் பட்டது. பின்பு திருவாளர் நா. ரெத்தினம் பிள்ளை அவர்கள் தலைமையில் கூட்டம் நிறைவேறியது. அவ்வமயம் நா. இராமனுதன், சித. சேது, ச. சுப்பிரமணியன், சுந்தரராமானுஜம், கரு. சுப்பையாபிள்ளை, மு. ஜான்சாமுவேல் வயிரவன் முதலிய அன்பர்கள் சொற்பொழிவு ஆற்றி பின்பு கூட்டம் இனிது நிறை வேறியது.

லெட்சுமிபுரம்

11-9-46 மாலை 4 மணிக்கு இலட்சுமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலையில் 'கவிபாரதிவிழா' கொத்தமங்கலம் திருவாளர் கதி. அருணாசலம் செட்டியார் அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று. சொ. வி. மாணவ மாணவிகளின் பாட்டு, பேச்சு நடிப்பு முதலியவை நடைபெற்றன. தலைவர் தகுந்த முடிவுரை கூற எல்லோருக்கும் தின் பண்டங்கள் வழங்கப் பெற்று விழா இனிது நிறைவெய்தியது.

நாட்டரசன் கோட்டை

கம்பன் தமிழ் மன்றச் சார்பில் 11-9-46 புதன்கிழமை மாலை 5 மணிக்கு பாரதி விழா திரு. கண. இராமனுதன் அவர்கள் தலைமையில் கொண்டாடப் பட்டது. அது பொழுது கிரு சோம. கிருட்டிணன், க. சொக்கலிங்கம், சித. அருணாசலம் வே. கண்ணப்பன், சுப. இராமனுதன் எம். எ. ஆகியவர்கள் சொற்பொழிவாற்றினார்கள்.

மானகிரி

11-9-46 மாலை 5 மணிக்கு இந்நகர் லெ. அரு. பள்ளியிலிருந்து மகாகவி சி. சுப்பிரமணிய பாரதியாரின் உருவப்படத்தின் ஊர்வலம் நடைபெற்றது. பிறகு இந்நகர் திரு. நா. சொ. நாச்சியப்ப செட்டியாரவர்களால் தேசிய மூவர்ணக் கொடி ஏற்றுவிக்கப்பட்டது. கூட்டத்திற்குத் தளக்காவூர் திரு. எஸ் சின்னச்சாமி பிள்ளையவர்கள் தலைமை வகித்துப் பாரதியாரின் தேச சேவைகளைக் குறித்துப் பேசினார்கள். மற்றும் பல அன்பர்கள் பாரதியாரின் ஜீவிய சரித்திரத்தைப் பற்றியும், சொற்பொழிவு ஆற்றினார்கள். இவ்விழாவில் ஜில்லாக் கல்வி இலாக்காவைச் சேர்ந்த திரு. வடிவேலு அவர்கள் கலந்துகொண்டு பாரதியாரைப் பற்றிப் பேசினது குறிப்பிடத்தக்கது. ராம. மெய்யப்பனவர்கள் பாரதியாரின் தேசிய கீதங்களில் சிலவற்றைப் பாடினார். பிறகு வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது முடிவுற்றது.

## விளம்பரம்

காரைக்குடி முனிசிபாலிட்டியைச் சேர்ந்த செக்காலையில் சிவகெங்கை சமஸ்தானத்துக்குச் சொந்தமான நிலங்கள் பிளாட்டுகளாகப் பிரிக்கப்பட்டு விற்பனைக்குத் தயாராக இருக்கின்றன. அவைகளில் பிளாக் நம்பர் 28 முதல் 31 வரையில் உள்ள 92 பிளாட்டுகள் மட்டும் 7-10-46-உ திங்கட்கிழமையன்று மாலை 2 மணிக்கு கோவிலூர் முகாமில் வைத்து விற்பனைக்கு ஏலம் விடப்படும். ஷை பிளாட்டுகள் காரைக்குடி முனிசிபல் எல்லைக்குள் இருக்கின்றன. முனிசிபல் ரோடுகள் போடப்பட்டிருக்கின்றன. காரைக்குடி ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகாமையிலும் நல்ல தண்ணீர், மின்சார வசதிகளுடன் அமைந்திருக்கின்றன. ஏலக் கண்டிஷன் மற்ற விபரங்களுக்குக் கண்டதேவி தாலுகா ஆபீசிலும், கோவிலூர் ரேஞ்சு இன்ஸ்பெக்டரிடமும் தெரிந்துகொள்ளலாம்.

16-9-46. திவான்,

சிவகெங்கை சமஸ்தானம்







## பிரிட்டிஷ் இந்தியாவில் தொழில் தகராறுகள்

1945 செப்டம்பர் 30-ந்தேதியுடன் முடிவடைந்த மூன்று மாத காலத்தில் பிரிட்டிஷ் இந்தியாவில் ஏற்பட்ட தொழில் தகராறுகள் காரணமாக மொத்தம் 8,58,559 நபர்-நாட்கள். ஒரு ஆள் ஒரு நாளைக்கு வேலை செய்வது ஒரு நபர்-நாளாம்— நஷ்டமாயிருக்கின்றன. முந்திய வருஷம் இதே மூன்று மாத காலத்தில் மொத்தம் 4,46,466 நபர்-நாட்களே நஷ்டமாயின. மொத்தம் 179 வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. 1,84,697 தொழிலாளிகள் இவற்றில் சம்பந்தப்பட்டிருந்தனர். 1944-ம் வருஷ மூன்றுவது கால் வருஷத்தில் மொத்தம் 120 வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன.; 1,09,819 தொழிலாளிகள் அவற்றில் சம்பந்தப்பட்டிருந்தனர். மூன்று வேலை நிறுத்தங்களில் 1,0000 தொழிலாளிக்குமேல் சம்பந்தப்பட்டிருந்தனர். ஐந்து வேலை நிறுத்தங்களில் 5,000 முதல் 1,0000 தொழிலாளர்கள் வரை சம்பந்தப்பட்டிருந்தனர். ஒரே வேலை நிறுத்தத்தில் மாத்திரம் ஒரு லட்சம் நபர்- நாட்களுக்கு மேல் நஷ்டமாகியிருக்கிறது. வேலை நிறுத்தங்களில் நூற்றுக்கு 33 ஜவுளி உற்பத்தி ஆலைகளிலே நடைபெற்றன. வேலை நிறுத்தங்களில் கலந்து கொண்ட தொழிலாளர்களில் நூற்றுக்கு 45 பேர் ஜவுளி உற்பத்தித் தொழிலைச் சேர்ந்தவர்கள்; மொத்தம் நஷ்டமான நபர்- நாட்கள் 41 சதவிகிதம் இந்தத் தொழிலிலேயே ஏற்பட்டது.

93 வேலை நிறுத்தங்கள் கூலி விகிதம் அல்லது போனஸைப் பற்றிய தகராறுகளில்எழுந்தவை. வேலைநிறுத்தங்களின் மொத்த எண்ணிக்கையில் 44 சத விகிதம் தொழிலாளருக்கு முற்றிலும் சாதகமாகவோ அல்லது ஓரளவு சாதகமாகவோ முடிவுற்றன. நூற்றுக்கு 42 வேலை நிறுத்தங்கள் தொழிலாளருக்கு முற்றிலும் தோல்வியாகவே முடிந்தன.

—

முஸ்லிம் என்று அழைக்க

'முகம்மதியர்' என்ற பதத்திற்குப் பதிலாக 'முஸ்லிம்' என்ற பதம் உபயோகிக்கப்பட வேண்டுமென்று சென்னை சர்க்கார் உத்திரவிட்டிருக்கிறது.



## பாரதியாரின் உள்ளம்

பெ. நாகப்பன்

'யாதும் ஊரே யாவருங்கேளிர்' என்ற பான்மையில் கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் தம் கருத்துக்களை வெளியிட்டார். தமிழர்களைத் தட்டி எழுப்பியது பாரதியின் பாடல்கள். ஒரு சாதிக்கோ, ஒரு சமயத்துக்கோ ஏற்பட்டதல்ல! பெரும்பாலான பாடல்கள் ஒரே புரட்சி. மிக எளிமை, அதோடு மட்டுமல்ல. அழகும் ஆழ்ந்த கருத்தும் அமைந்துள்ளது. பெரும்பகுதி எல்லாத்துறைகளிலும் பாரதி பாடல்கள் சிறந்து விளங்குகின்றன. சிறப்பாகப் பெண்விடுதலை. அரசியல் பக்திக்கு முருகன் பாட்டு, கண்ணன் பாட்டு, தற்கால நிலை, நாடு, மொழி இவைபோன்ற பாடல்கள்தான் மக்களை விழிக்கச் செய்தது. பன்னெடுங் காலம் தூங்கிய தமிழர்களைத் தட்டி எழுப்பியது பாரதியின் பாடல்களே என ஐயமறக்கூறலாம். பாரதி தோன்றிய நாளில் பாரதமக்கள் தம் நிலை மறந்து கூட இருந்தார்கள்.

தமிழ்ப் பெரும் புலவர்களான இளங்கோ, வள்ளுவன் கம்பன் முதலானவர்கட்குப் பிறகு சிறந்து விளங்கிய கவிஞர் பாரதியாரே யாவார். பஞ்சத்தால் மக்கள் படும்பாட்டைக் கண்ணுற்று நெஞ்சம் குமுறிக் கூறுகின்றார் பாருங்கள்.

"பஞ்சமோ பஞ்சமென்றே—நிதம்
பரிதவித்தே உயிர் துடிதுடித்து
துஞ்சி மடிகின்றாரே—இவர்
துயர்களைத் தீர்க்கவோர் வழியிலையே

பக்தர்கள் பலருண்டு. அதில் தேசபக்தரும் சேர்ந்தவரே. அன்னாரின் போலித்தனத்தைக் காண்கினறார். கண்டபடி உண்மையைக் கூறுகின்றார்.

"தாயைக் கொல்லும் பஞ்சத்தைத் தடுக்க [முயற்சியுறார்
வாயைத்திறந்து சும்மா கிளியே
வந்தேமாதரமென்பார்"

உறுதி பூண்ட மனத்தோடு சுதந்திரத்தை வலியுறுத்திப் பாடுகின்றார். உறங்கிய தமிழரைத் தட்டி எழுப்புகின்றது பாட்டு;

"விண்ணி லிரவிதனை விற்று விட்டெவ [ரும் போய்
பின்மினி கொள்வாரோ?
கண்ணிலு மினிய சுதந்திரம் போனபின்
கைகட்டிப் பிழைப்பாரோ?"

எழுத்தறி வித்தவன் இறைவன் ஆகும் என்பது ஔவை அரும் மொழி. அதை இன்னும் நன்கு—விரிவாக இன்னின்ன தருமத்தைக் காட்டிலும் எழுத்தறிவித்தல் சிறந்தது எனக் காட்டுகின்றார். பாருங்கள்.

"இன்னறுங் கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகளியற்றல்
அன்ன சத்திர மாயிரம் வைத்தல்
ஆலயம் பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியங்கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத் தறிவித்தல்"

பாரதி விடுதலை காணுகின்றார். மற்றவர் போலல்ல. அவர் காணும் விடுதலை மிக உயர்ந்தது.

"மாதர் தம்மை இழிவுசெய்யும் மடமை [யைக் கொளுத்துவோம்
வைய வாழ்வு தன்னிலெந்த வகையிலும் [நமக்குளே
தாதரென்ற நிலைமைமாறி ஆண்களோடு [பெண்களும்
ஸரிநிகர் சமானமாக வாழ்வ மிந்த நாட் [டிலே"

பாரதியார் வறுமையால் வாடினார். உண்மை கண்டார். கண்டதை விண்டார். சில ஆண்டுகள் உலகிடை வாழ்ந்தார். என்றென்றும் மக்கள் மறவா நிலையில் உலவுகின்றார்.





## சமஸ்தான காங்கிரஸ் கோனுபட்டு

இவ்வூர் ஊராண்மைக் கழகக் கட்டிடத்தில் 5-9-46 மாலை 6 மணிக்கு திரு. மு. அ. ப அ. பழநியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் ஆட்சிக் குழு தேர்தல் நடைபெற்றது. அவ்வமயம் கீழ்க்கண்டவர்கள் எதிர்ப்பின்றி உறுப்பினர்களாகத் தற்காலிகமாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதோடு குழு உறுப்பினராக 9 பேர் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளார்கள்.

தலைவர் திரு. க. சு. மெ. ராம. மெய்யப்ப செட்டியாரவர்கள், துணை தலைவர். திரு. பி. மு. பி. சுப்பிரமணியம் செட்டியாரவர்கள், செயலாளர்கள், திரு. மெ இலக்குமணன் அவர்கள் B. A. திரு. சு. கிருஷ்ணன் அவர்கள். நமது தேசத்தலைவர்கள் பண்டித நேரு தலைமையில் இடைக்கால சர்க்காரில் பதவி ஏற்றுக் கொண்டமை குறித்து ஓர் பாராட்டுச் செய்தி அனுப்புவதெனத் தீர்மானிக்கப்பட்டு அனுப்பப்பட்டது.

—

மூவார்

3-8-46 மாலை மணி 5 க்கு மூவார் சக்தி நிலைய மாஜித் தலைவர் பெ. சித. வி. அண்ணாமலை செட்டியார், காரியதரிசி பழநியப்பா, கோவிந்தன் கணக்குப் பரிசோதகர். ந. இராமையா மூவரும் தாய்நாடு செல்வதை முன்னிட்டு சக்தி நிலையத்தின் சார்பில் ஓர் பிரிவுபசார விருந்து நடத்தப்பெற்றது.

ஷை மூவரையும் பற்றி திரு. பாச மாணிக்கம் சிலாகித்துப் பேசினார். கூட்டத்திற்குத் தலைமை வகித்த திரு சிவ. சண்முகம் அவர்கள் தாயகம் செல்லும் மூவரது சேவையைப் பற்றியும் போற்றினார். திரு பழநியப்பனவர்களால் வந்தனோபசாரம் கூறப்பெற்று சிற்றுண்டிக்குப் பின் கூட்டம் கலைந்தது.

—

புதுக்கோட்டை
அச்சுத் தொழிலாளர் சங்கம்

1-9-46 மாலை 5 மணிக்கு முத்துராம் நிதிக் கட்டிடத்தில் நிர்வாக சபைக் கூட்டம் கூடியது. சங்கத்தின் சட்ட திட்டங்கள் பரிசிலனை செய்து ஒப்புக்கொள்ளப்பட்ட பின் திரு. டி. கே. ரெகுபதிராவ் உபகாரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் திரு. ஆர். நாதமுனிநாயுடு, திரு. டி. கே. ரெகுபதிராவ், திரு. கே. மணி திரு. கே. சிங்கமுத்து, திரு. சின்னத்தம்பி முதலியவர்கள் பேசினார்கள். தலைவர் முடிவுரைக்குப் பிறகு வந்தனோபசாரத்துடன் கூட்டம் 7மணிக்கு முடிவுற்றது.

தமிழ்மொழி வாழ்க

குமரன்

மகளிர் இல்லம்
வியஹு புரட்டாசிமீ 3உ

## இரு பெரியவர்கள்

உலகில் மூன்று பெரியார்கள்தாம் மிஞ்சியிருக்கின்றனர். பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யா, என்ற மூன்று தேசங்கள்தாம் இன்று உருப்படியாக இருக்கின்றன. மற்றவை யெல்லாம் நடந்த யுத்தத்தில் கரைந்துபோய் விட்டன. ஐரோப்பாவிலாவது இருக்கவேண்டாமா? உலகை ஆளப் பிறந்த கண்டமல்லவா ஐரோப்பாக் கண்டம். அதனையெண்ணி விசுவாசத்துடன் அடிபட்டுச் செத்துக் கிடக்கிற பிரான்ஸ் தேசத்தையும் தூக்கிக் கட்டிப் பிடிக்கிறார்கள். இந்த பிரான்ஸ் தேசம் ரஷ்யாவுடன் சேர்வதற்கில்லை. ஆகையால் ரஷ்யாவானது தன் வசப்பட்டிருக்கிற ஜெர்மனியைத் தயார் செய்து அதை யொரு உருப்படியான வகையில் தனக்குட்பட்ட ஒரு நாடாக்கி வைக்கப் பார்க்கிறதென்று செய்தி வரப் பார்க்கிறது. இவை சிருஷ்டி நாடுகள். ஆனால் உள்ளபடியே பலத்துடன் இருக்கிற நாடுகள் மூன்று தான் இம்மூன்றும் சண்டையில் ஏற்பட்ட உறவில் ஒன்றாகவே நின்றன. சண்டை காலத்திலும் இவை தம்முட் பரஸ்பர நல்லுறவில் இருந்தன என்று சொல்வதற்கில்லை. பொது எதிரியான ஜெர்மனியை ஓடிப்பதில் ஒற்றுமையாக இருந்தனவே யன்றி தங்கட்குள் தகராறு இருந்து கொண்டே யிருப்பதை யாவரும் அறிய முடிந்தது. சண்டை முடிந்த பிறகு அடிக்கடி பள்ள மேடு ஏற்பட்டுக்கொண்டே வருகிறதைக் காண்கிறோம். பிரிட்டனும் அமெரிக்காவும் சேர்ந்திருக்கிறதென்பது உலகறிந்த விஷயம். பிரான்சும் இவற்றை விட்டுப் பிரிவதற்கொன்றுமில்லை. அப்படியாகும்போது ரஷ்யர் தனியாகி விடுமென்று கூற வேண்டுமா? அமெரிக்கரின் அணுகுண்டு அட்டகாசம் அதன் தலைகொழுப்பிற்கு முக்கிய காரண மென்னலாம். ரஷ்யாவும் அந்த வகையில் ஜெர்மனியோடு கூடித் தீவிரமாக ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருப்பதாக இடையிடையே செய்திகள் வருகின்றன. சண்டை முடிந்தாலும் சமாதானமில்லை. மறு சண்டைக்கு விதை தூவப்பட்டு வருகிறதென்று கூற வேண்டியதில்லை.

அமெரிக்கர் தன் புத்தி கொண்டு நடககவில்லை யென்றும்; பிரிட்டன் என்ற பாலத்தில் நுழைந்து காரியம் நடத்துவது பிசகென்றும் அமெரிக்கர்கள் நினைக்கின்றனர். அமெரிக்கர் சொந்த புத்தியுடன நடக்க அதற்குத் துணிவேற்பட வேண்டுமென்று சிலர் வற்புறுத்தவும் முற்படுகிற காலம் வந்து விட்டது.

அமெரிக்க வியாபாரக் காரியதரிசி ஹென்றி வாலஸ் என்பவர் தமது பேச்சொன்றில் பின்வருமாறு கூறுகிறார்:—

அமெரிக்க அன்னிய நாட்டுக் கொள்கைக்கு பிரிட்டனைத் திறவுகோலாக உபயோகிப்பது அறிவின்மையின் சிகரத்தை எட்டிப் பிடிப்பதாகும். தூரக்கிழக்கில் பிரிட்டனின் ஏகாதிபத்தியக் கொள்கையும், இதற்கான ரஷ்ய/ எதிர்ப்பும் நம்மை மீண்டும் யுத்தத்தில் நிச்சயம் இழுத்து விட்டு போகின்றன. நம்முடைய கொள்கையைத் திட்டமான முறையில் உருவாக்காத பட்சத்தில் இதில்தான் போய் முடியும். நம்முடைய நிலையை ஸ்திரப் படுத்திக்கொள்ள வேண்டுமென்றால் அமெரிக்கக் கண்களின் மூலமாகவே நாம் பார்க்க வேண்டும். பிரிட்டிஷ் அன்னிய கார்யாலயத்தின் கொள்கையையோ, அல்லது ரஷ்ய எதிர்ப்பு பிரிட்டிஷ் ஆதரவு மிகுந்த பத்திரிகைகளின் அபிப்பிராயத்தையோ பிடித்துத் தொங்கக் கூடாது. ரஷ்யாவுடன் கடுமையாக நடந்து கொள்க என்ற கொள்கை சிறிதும் பயன் தராது. நமக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் நம் ஆதிக்கமுள்ள பிரதேசங்களில் ஜனநாயகக் கொள்கைகளைப் பரப்ப முயற்சிப்பதைப் போல் ரஷ்யர் தம் பிரதேசங்களில் சோஷலிஸ்ட் கொள்கைகளை வேரூன்றச் செய்ய முயற்சிப்பர்.

இவ்வளவு திடமாக உணர்ந்து கூறுபவர்கள் அமெரிக்காவில் இருக்கத்தான் செய்கின்றனர். இதையெல்லாம் மீறியது பிரிட்டிஷ் ராஜ தந்திரமென்பது பலரறிந்ததல்லவா?

## காரைக்குடி

### கதிரேசன் கழகம் ஆண்டுவிழா

மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களின் பிறந்தநாள் பாராட்டு விழாவும் கதிரேசன் கழகத்து மூன்றாவது ஆண்டு விழாவும் ஸ்ரீ. மீனாட்சி சுந்தரேசுவர உயர்தரப் பள்ளியில் புரட்டாசிமீ 6-ம் நாள் இருபோதும் நடைபெறும். உயர்திரு. எஸ். சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் (பி. ஏ. எல். டி.) தலைமை வகிப்பார்கள். திருவாளர்கள். பண்டித மு. முத்துவேங்கடாசலமய்யர், ப. அழகர்சாமி, பாலகவி வே. இராமநாதன் செட்டியார், மாணிக்கவாசகத் தம்பிரான், தி.ப.சுப்பிரமணியதாஸ் ஆகியோரது சொற்பொழிவுகள் நடைபெறும்.

### பிராம்மண யுவசங்கம்

தக்ஷிண பாரத பிராம்மண யுவசங்கத்தின் ஆரம்ப விழா 29-9-46 ஞாயிறன்று காரைக்குடியில், மதுரை மஹாமஹோபாத்யாய திரு. கே எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியார் தலைமையில் நடைபெறுகிறது. திவான் பகதூர் திரு. ஆர். வி. கிருஷ்ண ஐயர் திறப்புவிழா பிரசங்கம் நிகழ்த்துகிறார். சேலம் பிராம்மண மகாநாட்டுக் காரியதரிசிகளும், மதுரை, திருச்சி முதலிய இடங்களிலிருந்து பலரும் விழாவில் கலந்துகொள்கிறார்கள்.

### அமராவதிபதூர்

காந்தியடிகள் திருநாளும், காந்தி சமதர்ம பாடசாலையின் ஆண்டுவிழாவும் வியஹு புரட்டாசிமீ 7-உ திங்கட்கிழமை காரைக்குடி நகரக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர், திருவாளர், ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெறும்.

### பாரதிவிழா

ஆவினிப்பட்டி விவேகானந்தர் கல்விக் கழகத்தில் 13-9-46 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு பழைய மாணவர் முரு. சேதுராமனவர்கள் தலைமையில் பாரதிவிழா சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. தலைவர் முன்னுரையில் பாரதியாரின் பாகயத்தைப்பற்றி விரிவாகப் பேசினார்கள். அப்பால் கீழ்ச்சிவல்பட்டி ஆசிரியை ஸ்ரீமதி ராக்கம்மை அம்மையாரவர்களும், மாணவன் ஆர். எம். சாத்தய்யாவும் பாரதியாரைப் பற்றிப்பேசினார்கள். இடையிடையே பாரதியாரின் பாடல்களை மாணவர்கள் பாடினார்கள். தலைவர் கருத்துரைக்குப்பின் கூட்டம் முடிவுற்றது.

## காரைக்குடியில் முத்துத்தாண்டவர் விழா

சென்ற வாரம் அறிவிக்கப்பட்டிருக்கிறபடி ஸ்ரீ முத்துத்தாண்டவர் விழா புரட்டாசி 6, 7ந்தேதி ஞாயிறு திங்கட்கிழமைகளில் இருபோதும் ஸ்ரீ மீனாட்சி பெண்கள் உயர்தரப் பள்ளியில் நடைபெறும். முன் அறிவித்ததற்கு மேலும் பல இசை வித்வான்கள் கச்சேரி செய்ய இசைந்துள்ளார்கள். இரண்டு நாட்களிலும் ஏராளமான இசை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

### மஹாத்மாவுக்கு டாக்டர் பட்டம்

நாகபுரி சர்வகலா சாலையார் மகாத்மா காந்திக்கு "இலக்கிய மேதை" (டாக்டர் ஆப் லெட்டர்ஸ்) என்ற கௌரவப் பட்டத்தை வழங்குவதென்று தீர்மானித்திருக்கிறார்கள். நாகபுரிக்கு காந்திஜி வர இயலாவிட்டால் சேவாக்கிராமத்திலேயே பட்டமளிப்பு விழா நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

### அக்டோபர் 5-ந் தேதியில் நேத்தாஜி சுபாஷ்?

இந்துக்களின் வெற்றி தினமாகிய விஜயதசமியன்று, வங்காளிகளின் புனித தினமாகக் கொண்டாடும் அக்டோபர் 5-ந் தேதி யன்று, வட இந்தியாவில் எங்கோ ஓரிடத்திலிருந்து நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் வெளியே வருவார் என்று ஒரு ஜோதிடர் கூறுவதாக ஒரு பத்திரிக்கைச் செய்தி கூறிகிறது.

### ராஜாஜி தப்பினார்

புது டில்லியில் சி. ராஜகோபாலச்சாரியின் மோட்டார் அவரது ஜாகையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கும் பொழுது பின்னால் யாரோ ஒருவரால் சுடப்பட்டது. நல்ல வேளையாக ராஜாஜி அச்சமயம் காரில் இல்லை. டிரைவர் சத்தத்தைக் கேட்டு திரும்பிப் பார்க்கும் பொழுது யாரோ ஒரு நபர் ஓடுவதைக் கண்டார். பின்னால் மூட்டை வைக்கும் இடத்தில் ஒரு துவாரம் செய்யப் பட்டிருந்தது. துப்பாக்கிக் குண்டு ஒன்றும் காணப் பட்டதாம்.

### கோனாபட்டு

சிறுவர் கழகத்தின் சார்பாக சரசுவதி உயர்நிலைப் பள்ளி முதல்வர், திருவாளர் சு. மு. ராம. முரு. முருகப்ப செட்டியார் அவர்கள், புதுக்கோட்டை சட்டசபைத் தேர்தலில் எதிர்ப்பின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டதைப் பாராட்டி திருவாளர் பி. மு. பி. சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் தேநீர் விருந்து நடைபெற்றது. வரவேற்பு உரை செயலாளர் இராம. அருணாசலம், அவர்கள் கூறினார்கள். புலவர் க. தில்லைக்கோவிந்தனார் வாழ்த்து வழங்கினார். திருவாளர்கள் இராம சுப்பிரமணியம், முத்துப்பெருமாள், எஸ். கஸ்தூரி அய்யங்கார், ஜி. எஸ். நாராயணசாமி நாயுடு ஆகியவர்கள் பேசினார்கள். இரு தலைவர்களும் முடிவுரை கூற வந்தன வாழ்த்துடன் கூட்டம் முடிந்தது.

### அங்கீகாரம் ரத்து

கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்கள் சங்கத்துக்கு அளிக்கப்பட்டிருந்த அங்கீகாரத்தை சென்னை சர்க்கார் ரத்துச் செய்திருக்கிறார்கள். ஷை உத்தியோகஸ்தர்கள் நேரடி நடவடிக்கையில் இறங்கப் போவதாக பயமுறுத்தியதன் விளைவாக சர்க்கார் இந்த நடவடிக்கை எடுத்திருக்கிறது.

## காரைக்குடி கூட்டுறவு பண்டகசாலை

காரைக்குடி கோவாபரேடிவ் ஸ்டோர்சின் மகாசபைக் கூட்டம் 15-9-46 பிற்பகல் 6 30 மணிக்கு ஸ்டோர்ஸ் காரியாலயத்தில் திரு: மெ. செ. ச. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்ட ஆரம்பத்தில், பிரஸ்தாபக் கூட்டத்திற்கு நோட்டீஸ் சரியாகக் கொடுக்கப்படவில்லை யென்றும், போதுமானபடி விளம்பரம் செய்யப்படவில்லை என்றும் சொல்லி திரு சி. மு. அரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் கூட்டத்தை ஒத்திவைக்க வேண்டுமென்று பிரேரேபித்தார். அதை முனிஸிபல் சேர்மன் திரு. சி. முரு. நாராயணன் செட்டியார் அவர்கள் ஆமோதித்தார். கூட்டத்துக்கு சரியானபடி நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும். கூட்டத்தை நடத்தலாமென்றும், திரு எஸ். வி. சர்மா பிரேரேபிக்க திரு கே. எஸ். சுப்பையா ஆமோதித்தார். பிரஸ்தாபக் கூட்டத்துக்கு போதுமான விளம்பரம் செய்யப்பட்டிருக்கிறதென்று சொல்லி தலைவர் ஒத்திவைப்புப் பிரேரபணையைத் தள்ளுபடி செய்தார். இதை ஆட்சேபித்து திரு. சி. மு. அரு. அருணாசலம் செட்டியார் திரு. சி. முரு. நாராயணன் செட்டியார், திரு சி. மு. அரு. நா. அருணாசலம் செட்டியார் முதலிய அறுவர் வெளியேறினார்கள். பிறகு கூட்டம் ஆரம்பமாயிற்று. சென்ற ஆண்டு அறிக்கையும் கணக்கும், புது ஆண்டுக்கு வரவு செலவுத் திட்டமும் படிக்கப் பட்டு ஒப்புக்கொள்ளப் பட்டன.

சென்ற ஆண்டில் ஸ்டோர்சுக்கு ரூ 63 ஆயிம் நிகர லாபம் கிடைத்திருக்கிற தென்றும் வரும் ஆண்டில் லட்ச ரூபாய் லாபம் எதிர் பார்க்கப் படுகிறதென்றும், அதிகாரிகளாலும் காங்கிரஸ் தலைவர்களாலும் ஸ்டோர்ஸ் நன்மதிப்புப் பெற்றிருக்கிறதென்றும் பங்குதாரர்கள் யாவரும் ஒத்துழைக்கும்படியும் காரியதரிசி டாக்டர் சுப்பிரமணியம் கேட்டுக் கொண்டார்.

புது ஆண்டுக்கு அடியிற்கண்டவர்கள் டைரக்டர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள், திருவாளர்கள் மெ. செ. செ. சிதம்பரம் செட்டியார் அ. ராம. ராம. ராமனாதன் செட்டியார் நா. அ. சாமினாதன் செட்டியார், மெ. வி. மெ. மெய்யப்ப செட்டியார், டாக்டர் எஸ். சுப்பிரமணியம், எஸ். சேஷய்யங்கார் எஸ். லெட்சுமணன் ஆகிய எழுவர்.

மதுரை இராமனாதபுரம் கூட்டுறவு மொத்த விற்பனைச் சங்கத்துக்கு திரு. எஸ். லெட்சுமணனும் இராமனாதபுரம் ஜில்லா கூட்டுறவு பாங்குக்கு திரு. இராமசாமி ஐயங்காரும் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். உள்ளூர் ஹைஸ்கூல் தலைமையாசிரியர் ஏழைப் பிள்ளைகளின் உபகாரச் சம்பளத்துக்கும் புதுக்கட்டிடம் கட்டுவதற்கும் ஒரு தனிசமான தொகை உதவவேண்டுமென்று கேட்டிருந்த கடிதம் விவாதிக்கப்பட்டு ஸ்டோர்ஸ் பேரால் ஒரு கட்டிடம் கட்ட ரூ. 1,500-க்கு மேற்போகாமல் நன்கொடையளிப்பதென முடிவு செய்யப்பட்டது.

### சேக்காலை

கலைமகள் கழகம் தமிழ் மாணவர் கழகம் கூட்டு ஆண்டு விழா, அவையரங்கம் வியஹு புரட்டாசிமீ 13உ நடக்கவிருக்கிறது. அவ்வமயம் "தியாகி" ஆசிரியர் ராமசடகோபன், லால்குடி அ. நடேசமுதலியார், மதுரை, சுந்தராமன் முதலியோர் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.



# புலவர் போட்டி

ஈகையால்; வாய்மையால்; ஈரமுள்ள; வீரத்தால்
வாகை புனைந்தோறும் மாண்டிட்டார்—ஆகையால்
நன்றிலையென் றெண்ணாதே: நானிலத்தோர் மாண்டா [லும்
பொன்றுது நிற்கும் புகழ்.

மு. இளநாகன், மேலைச்சிவபுரி.

இடைக்கால சர்க்காரை ஏற்படுத்தி மற்றும்
நடைக்கால சர்க்காரை நாடிச்—சடைப்பெண்ணே!
நன்றுளப் பேறுற்ற நம்மவரின் சீரன்றோ
பொன்றுது நிற்கும் புகழ்.

சுப. சுப்பிரமணியன், அண்ணாமலை நகர்.

புலவர்கள் போட்டி புகழும் மலராம்
உலகில் நடக்கின்றன உண்மை—பலவினையும்
நன்றாய்த் தருகின்ற நம்'குமரன்' எக்காலும்
பொன்றுது நிற்கும் புகழ்.

கு. ஆ. ஆ. ஆவுடையப்பன், வடக்குத்தெரு, கோநகர்.

மண்ணுலகில் வாழ்கின்ற மக்கள் அடியவர்கள்
விண்ணுலகில் எய்தாத வேளையிலும்—நண்ணிமனம்
அன்னம் வழங்கி அகமகிழ மக்களுக்குப்
பொன்றுது நிற்கும் புகழ்.

சின்ன, ஆ. மாணிக்கம் வடக்குத்தெரு கோநகர்.

பாட்டில் தமிழுணர்ச்சி பாய்ச்சிநல்ல கற்பனையில்
பூட்டிக் 'குமானி'தழ்ப் போட்டியிலே—போட்டிடு [வீர்
என்றென்றும் உம்பேர்மேல் ஏற்றதோர் பாட்டிருப் [பின்
பொன்றுது நிற்கும் புகழ்.

லெ. சா. சொக்கலிங்கம், க.செ. கல்லூரி, மேலச்சிவபுரி.

செந்தமிழை நன்குணர்ந்தோர் செல்வமதைக்கைக் [கொண்டு
எந்நாளும் வெண்பா இயற்றுதற்கு—இந்நாளில்
குன்றுது ஈற்றடிகள் கொண்ட 'குமரனு'க்கே
பொன்றுது நிற்கும் புகழ்.

அழ. சுப்பிரமணியன், ஆவினிப்பட்டி.

கலைக்காக கோயில்கள் காவித் தனத்தின்
நிலைக்களனு? நீதி நிலைக்கத்—தலைக்கடமை
ஒன்றுசெய், கோயில் உலககலைக்(கு) இல்லமாய்
பொன்றுது நிற்கும், புகழ்.

[இல்லம்- உறைவிடம்]

ராம. குப. வெங்கடாசலம், அரசர் கல்லூரி,
புதுக்கோட்டை.

தாழ்வும் உயர்வும் தமிழா! கருதுவதேன்?
சூழ்அம்பரம் வஞ்சகரின் சூழ்ச்சிதனை—வீழ்த்து [தற்கு
இன்பமுடன் உன்னுடைய இன்னுயிரும் ஈவதன்றோ
பொன்றுது நிற்கும் புகழ்.

வீர. மெய்யப்பன், மன்னர் கல்லூரி, புதுக்கோட்டை.

சண்டையின்றி மக்களெலாஞ் சந்தோஷ மாய்வாழத்
தொண்டினிது வந்தாற்றுந் தூயோர்க்கே,—வண்டி [னங்கள்
நின்றுடும் பூங்குழலாய்!நீடார் குவலயத்திற்
பொன்றுது நிற்கும் புகழ.

சோ. தேவராஜன், காரைக்குடி.

தெய்வத் தமிழ்ப்பணியும் தேசத் திருத்தொண்டும்
மெய்யுடனே தான்புரிந்தால் மேதினியில்—எய் [திடலாம்
சன்மார்க்கத் தில்லொழுகும் சான்றோர்கள் வாழ்த் [துடனே
பொன்றுது நிற்கும் புகழ்.

அண. அண்ணாமலை, கதிரேசன் கழகம், காரைக்குடி.

செல்வம் பொழிகின்ற செட்டிமார் நாட்டினிலே
கல்வி பொழியாத காரணமேன்?—கல்வியிங்கு
என்றும் தழைத்தோங்க ஏற்றவகை செய்திடுவீர்
பொன்றுது நிற்கும் புகழ்!

தமிழ் அண்ணல், க. செ. கல்லூரி, மேலச்சிவபுரி.

உண்மையிலே நாட்டன்பும் ஊக்கும் மொழியன்பும்
ஒண்மையிலே வாழ்வாரை ஊர்பண்பும்-பெண்மயிலே!
குன்றுது கொண்டவர்க்கே குன்றேபோல் நிற்குமே
பொன்றுது நிற்கும் புகழ்!

கதி. சுந்தரம், வலம்புரி.

வேதியச் சதி கடந்து; வெல்லத் தமிழ் வெல்ல,
சாதி சமயச் சழக்கொழிய—மேதினியில்
குன்றுத் தமிழுணர்வு கொண்டால்; தமிழனுக்கே
பொன்றுது நிற்கும் புகழ்.

ராம. பெரி. கரு. நெற்குப்பை.

இளமை தழிந்துவிடும்; ஈடிலா யாக்கை
வளமை அழிந்து மடியும்;—உள்செல்வம்
இன்பத்தோ டடழியும்; இவ்வுலகிலே நிலையாய்ப்
பொன்றுது நிற்கும், புகழ்.
('புகழ் பொன்றுது நிற்கும்' எனக்கூட்டுக)

மு. சேதுராமன், க. செ. கல்லூரி, மேலைச்சிவபுரி.

செட்டியார், தேவரையர், சேர்வை, பிள்ளை, (வாண்டையார்,
ரெட்டி, கவுண்டரெலாம் "குரங்கின்-குட்டை வால்"
இன்றே அகற்றி எழில்பெறுவீர் எந்நாட்டீற்
பொன்றுது நிற்கும் புகழ்.

சரு. மு. ராம. சிங்காரம், நெற்குப்பை.

மண்ணுலகில் தோன்றவே மாதவஞ்செய் (மாந்தர்காள்
விண்ணுலகை எய்தவே வேணுமென்று-எண்ணினால்
அன்றறிவாம் என்னுதறஞ்செய்க; மற்றதனால்
பொன்றுது நிற்கும் புகழ்

கா. கிருஷ்ணப்பன், கோநகர்.

பைந்தமிழின் பாவலனும் பாரதி தாசன்தான்
பைந்தமி ழிற்பாண் டியன்பரிசு—தந்திட்டார்
அன்னதுவே இவ்வுலகில் அன்னவர்க்கு எந்நாளும்
பொன்றுது நிற்கும் புகழ்.

அழகன், மேலைச்சிவபுரி.

பஞ்சத்தால் துன்புறுவோர் பல் கோடி அன்றியும்
கஞ்சியின்றிச் செத்தவர் எத்தனையோ—தஞ்சமென
நின்றார்க்கு கஞ்சி நிறைத்திட்டால் எஞ்ஞான்றும்
பொன்றுது நிற்கும் புகழ்.

வீரமுத்துகிளி, காரைக்குடி.

வள்ளுவனின் வாய்மைக் குறளும்; இளங்கோவின்
தெள்ளுதமிழ்த் தேன்சிலம்பும் தென்னாட்டில்— (கிள்ளையே!
தொன்னூற் புலவர்கள் தொல்பெருமைக் (கோர்வித்தாய்ப்
பொன்றுது நிற்கும் புகழ்.

கரு.காசி, தமிழ் மாணவன், க. செ. கல்லூரி, (மேலைச்சிவபுரி.

பல் விகற்ப பஃறொடை வெண்பா

கரும்பினிலே சாறெடுத்துக் கன்னிமொழி சேர்த்து
விரும்புமட்டும் உண்ண விருந்தளித்த அத்தாநே!
என்புதோல் போர்த்திட்ட இவ்வுடம்பு பொன்றுமே,
இவ்வுடம்பு பொன்றுமுன், ஏரார் இருந்தமிழ்க்கு
நன்மை பலவாற்றி நாம் பெறுவோம் எந்நாளும்
ஒன்று உலகத் துயர்ந்து நிலைபெறாஉம்
பொன்றுது நிற்கும் புகழ்.

வே. அண்ணாமலை, க. செ. கல்லூரி, மேலச்சிவபுரி.

நன்மை தரும் அறங்கள் நானிலத்திற் செய்திட்டால்
பொன்றுது நிற்கும் புகழ்என்றார்—உண்மையது
குன்றுது நிற்கும் 'குமர'னின் ஈற்றடியாம்
பொன்றுது நிற்கும் புகழ்.

சோம. திருநாவுக்கரசு, மோதிலால் தெரு,
நாச்சியாபுரம்.

சிறையிழந்த புட்போலச் செல்லா அறிவை
முறையே செலுத்தவழி முன்னி—இறைபணிந்து
நின்றே குருவை நிதமும் பணிந்துவரின்
பொன்றுது நிற்கும் புகழ்.

'அழகுடம்பன்' கோநகர்.

அடுத்த ஈற்றடி:-

**வாழ்வதற் கேற்ற வழி**

## ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்கள்

மாகாணத்திலுள்ள நகரசபைகளுக்கு நடக்கவேண்டிய தேர்தல் தேதிகளை அடியிற்கண்டபடி சென்னைச் சர்க்கார் நிர்ணயித்திருக்கிறார்கள். வோட்டர் ஜாப்தாவும் நோட்டீசும் பிரசுரிக்க கடைசித் தேதி. நவம்பர் 4. நாமினேஷன் பாரங்களைப் பெற்றுக்கொள்ளும் தேதி நவம்பர் 11, 12, 13. பரிசீலனை 14-ந் தேதி ஆட்சேபம் ஏதுமில்லாதிருந்தால் அபேட்சகர்களின் பெயர்களை வெளியிடும் தேதி நவம்பர் 18 ஆட்சேபமிருந்தால் 22-ந் தேதி. எலக்ஷன் டிசம்பர் 9. வோட்டு எண்ணிக்கை டிசம்பர் 10.

இராமநாதபுரம் ஜில்லாவுக்கு தேர்தல் நடைமுறை வருமாறு:—

வோட்டர் ஜாப்தாவும் நோட்டீசும் நவம்பர் 7-ல் வெளியாகும். நாமினேஷன் பாரங்களைப் பெற்றுக்கொள்வது நவம்பர் 18, 19. பரிசீலனை 20-ந் தேதி. ஆட்சேபமில்லாவிட்டால் அபேட்சகர்கள் ஜாப்தா 25-ந் தேதியிலும் ஆட்சேபமிருப்பின் 28-ந் தேதியிலும் வெளியிடப்படும். டிசம்பர் 21-ல் எலக்ஷன். வோட்டு எண்ணிக்கை டிசம்பர் 22.

### ஜில்லாப்போர்டு தேர்தல் கமிட்டி நியமனம்

இராமனாதபுரம் ஜில்லாப்போர்டுத் தேர்தல்களை நடத்துவதற்காகத் தமிழ் நாடு காங்கிரஸ் காரியக்கமிட்டி பின்கண்ட அங்கத்தினர்களை கமிட்டி அங்கத்தினர்களாக நியமித்திருக்கிறது. திருவாளர்கள் எஸ். ஆர். எம். சங்கரலிங்கம் பிள்ளை, கே. எஸ். முத்துச்சாமி, ஏ. வி. திருப்பதி ரெட்டியார், வெ. விர. நா. அரு. நாகப்ப செட்டியார், ஏ. திருமலை நாயுடு, எஸ். ஜெயராம ரெட்டியார், ஆர். வி. சாமிநாதன் (கன்வீனர்.)

### ஆயுர்வேத காலேஜ்கள்

மாகாணத்தில் ஐந்து ஆயுர் வேத காலேஜ்களைத் திறக்க சென்னை சர்க்கார் ஒப்புக் கொண்டு விட்டது. இது சம்பந்தமான உத்திரவு சீக்கிரம் வெளியிடப்பெறும் என்று சொல்லப்படுகிறது.

### சிந்து சட்டசபை கலைக்கப்பட்டது

சட்டசபையில் ஏற்பட்ட நெருக்கடியின் காரணமாகவும் தலைவர், உபதலைவர் பதவிகளை ஏற்க ஒருவரும் முன்வராததாலும் சட்டசபையைக் கலைத்துவிட்டு மறு தேர்தலுக்குக் கவர்னர் உத்தரவிட்டுள்ளார்.

### குன்னக்குடியில் பாரதி தினம்

15-9-46 மாலை 5 மணிக்கு ஒரு ஊர்வலமும் திரு பழ. முருகானந்தம் அவர்கள் தலைமையில் ஒரு பொதுக் கூட்டமும் நடைபெற்றது. கூட்டத்தில் ராம. கன்னையா, ஆறு. அண்ணாமலை, கா. மு. பக்கிரிமுகமது முதலியோர்கள் பாரதியாரைப் பற்றி பேசினார்கள்.

### கல்லல்

16-846 திரு நீ.செல்லையா ஆச்சாரி தலைமையில் மலேயாவுக்குப் பிரயாணமாகிற, திரு க. சொ. ஆதப்பா கல்லல் கிராமக் காங்கிரஸ் கமிட்டித் தலைவராக இருந்து செய்த சேவையைப் பாராட்டிப் பிரிவுபசாரக் கூட்டம் நடந்தது. நேத்தாஜி இளைஞர் சங்கத்தார் உபசாரப் பத்திரம் வாசித்தளித்தார்கள். திரு எஸ். மீனாட்சிசுந்தரம்பிள்ளை, திரு ஆர். கே. ராமஸ்வாமி அய்யங்கார், திரு அ. குமாரவேல் பிள்ளை, திரு சோம. ராஜாராம், முதலியவர்கள் பாராட்டிப் பேசினார்கள்.

## பலுசிஸ்தானத்தில் கந்தகச் சுரங்கம்

பலுசிஸ்தானத்தில் கோஹிசுல்தான் பிரதேசத்தில் சுமார் 85,000 டன் கந்தகக்கனியம் பூமியில் புதைந்து கிடக்கிறது. சுமார் 1,0000 டன் உயர்ரகக் கனியம் கோக்-சுந்திரயில் முகப்பிலேயே கிடைக்கிறது. இவைகளை வெட்டி யெடுத்து, வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் கந்தகத்துடன் லாபகரமாகப் போட்டியிட முடியுமா என்பது சந்தேகமேயாயினும், உயர்ரகக் கனியத்தைப் பூஞ்சாரக் கொல்லி மருந்தாக லாபகரமாக உபயோகிப்பது சாத்தியமாயிருக்கக்கூடும். சரிபாதி கந்தகக் கலப்புள்ள பலுசிஸ்தான் கனியம், கம்பு, கேழ்வரகில் படரும் தானியப் பூஞ்சனத்தை அழிப்பதற்கு நன்கு பயன் படுவதாகக் கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. கோஹிசுல்தான் கந்தகத் தயாரிப்பு வேலைகளை விவரித்து, விஞ்ஞானத்தொழில் ஆராய்ச்சிக் கழக சஞ்சிகையின் ஜூலை மாத இதழில் வெளியாகியிருக்கும் ஒரு கட்டுரையில் இந்த அபிப்பிராயம் கூறப்பட்டிருக்கிறது.

யுத்தத் தொழில்களுக்கு மிக அவசியமான கனிப்பொருள்களில் கந்தகமும் ஒன்றாகையால், யுத்தத்தின் விளைவாக இறக்குமதிகள் நின்று போவதும், இந்தியா உள்நாட்டு மூலங்களை அபிவிருத்தி செய்து பயன்படுத்திக் கொள்ள வேண்டியதாகிவிட்டது. யுத்தத்துக்கு முன்பு இந்தியாவுக்குப் பிரதிவருஷமும் சுமார் 25000 டன் கந்தகம் தேவையாயிருந்து வந்தது. இவை பூராவும் வெளி நாடுகளிலிருந்தே இறக்குமதியாகி வந்தன. வெடிமருந்து உற்பத்தியிலும், உலோகத் தொழில்களிலும் கந்தகத் திராவகம் அங்கமாக உபயோகிக்கப் பட்டு வந்ததால் யுத்தத்தின் போது இந்தியாவின் தேவையும் வெகுவாக உயர்ந்துவிட்டது.

யுத்த காரியங்களுக்குத் தேவையான கந்தகத்தைப் பெறுவதற்காக இந்தியா பூகர்ப்ப ஆராய்ச்சிக் கழகத்தினர், 1940-ல், பலுசிஸ்தானத்தைச்சேர்ந்த கோஹிசுல்தான் பிரதேசத்தில் பூகர்ப்ப ஆராய்ச்சி வேலையை விரிவாக நடத்தத் தீர்மானித்தனர். போக்குவரத்து வசதிகளில்லாமல், போதிய அளவு குடிதண்ணீரில்லாமல், சாதாரணமான பல கஷ்டங்களுக்கிடையில் ஆராய்ச்சி வேலைகள் நடத்தப்பட்டன. ஆயினும், பலுசிஸ்தானத்தில் வடமேற்கு ரயில் பாதையிலிருந்து 20 முதல் 25 மைல் தூரத்திற்குள் உயர்ரகக் கனியம் ஏராளமாக இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. நின்றுபோன அமெரிக்க கந்தக இறக்குமதியை இது ஈடு செய்து விடுமென்று தோன்றியது. எரிமலைகள் நிறைந்த கரடுமுரடான இந்த மலைப் பிரதேசத்தில் மோட்டார் லாரிகள் போய்வருவதற்கான ரஸ்தாக்கள் அமைக்கப்பட்டன. ரயில் முகப்பிலிருந்து சுரங்க ஸ்தலம் வரை சுமார் இரண்டு மைல் நீளத்துக்கு வான மார்க்கக் கம்பிப் பாதையொன்றும் அமைக்கப்பட்டது. 1941-லிருந்து 1944 வரை இந்தப் பிரதேசத்திலிருந்து சுமார் 66,300 டன் கந்தகக் கனியம் வெட்டியெடுக்கப்பட்டிருக்கிறது.

---

### கி. உ. க்களுக்கு சம்பள உயர்வு

கிராம உத்தியோகஸ்தர்களுக்கும் கிராம கீழ்த்தர சிப்பந்திகளுக்கும் 1946 ஆகஸ்ட் முதல் மாதம் ரூ. 3 அதிகமாகச் சம்பளத்துடன் கொடுப்பதென்று சென்னைச் சர்க்கார் தீர்மானித்திருக்கிறது.

## ரசாயனக் கருவிகளுக்கு துருசுத் தடை

ரசாயனத்தொழில்களில் உபயோகிக்கப்படும் கருவிகளிலும் பாண்டங்களிலும் ரப்பர்ப் பூச்சுப் பூசுவதன் மூலம், அவைகள் கரைந்து போவதையும் கருப்பிடிப்பதையும் தடுக்கலாமென்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. விஞ்ஞானத்தொழில் ஆராய்ச்சிச் சபையின் நிதி உதவி கொண்டு பங்களூர் இந்திய விஞ்ஞானக் கழகத்தில இது பற்றிய ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. இந்த ஆராய்ச்சிகளின் விளைவாகக் கண்டு பிடிக்கப் பட்ட முடிவுகள், விவரிக்கப் பட்டிருக்கின்றன. இந்தியாவில் அசல் ரப்பர் கிடைப்பதாலும், ரசாயனத் தொழில்கள் அபிவிருத்தி செய்யப்பட்டு வருவதாலும், இந்த ஆராய்ச்சிகள் விசேஷ முக்கியத்வம் வாய்ந்தவையாகும். இது சம்பந்தமாக ஆராய்ச்சிக் கழகத்தில் கண்டு பிடிக்கப்பட்ட சில முறைகளின் உரிமைகள் இந்தியாவில் பதிவு செய்யப் பட்டுள்ளன.

---

### பர்மாவுக்குத் தபால் பார்சல்கள்

22 பவுண்டுக்கு மேற்போகாத எடையுள்ள பார்சல்கள் தபால் மூலம் பர்மாவுக்கு அனுப்பப்படுவதற்கு இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்படும். 11 பவுண்டுக்கு அதிகமான ஆனால் 22 பவுண்டுக்கு மேற்போகாத எடைப் பிரிவிலுள்ள பார்சல்களுக்குத் தபால் கட்டணம் ரூ. 6-8-0. 20 பவுண்டு எடைப்பிரிவு கிடையாது. தபால் போக்கு வரத்து சம்பந்தமான மற்ற விதிகளில் மாறுதலெதுவுமில்லை.

## உயர்ந்த ரகச் சுண்ணாம்புக் கல்

இந்தியாவில், உயர்ந்த ரகச் சுண்ணாம்புக் கற்கள் இருக்கும் ஸ்தலங்கள், அவை சம்பந்தமாக நடத்தப்பட்ட ரசாயனப் பரிசோதனைகளின் முடிவுகள், கிடைக்கக்கூடிய கற்களின் உத்தேச அளவு ஆகியவை பற்றிய கட்டுரை யொன்றும் வெளியாகியிருக்கிறது. ரசாயனத் தொழிலுக்கு சுண்ணாம்புக்கல் இன்றியமையாததாகும். உதாரணமாக, சலவைச்சுண்ண (ப்ளிச்சிங் பௌடர்) உற்பத்தியில் இது அதிகம் உபயோகப்படுகிறது. பளிங்கு சுண்ணாம்புக்கல் விஞ்ஞானக் கருவிகள் செய்ய உபயோகப்படுகிறது. பவளச் சுண்ணாம்புக்கல்லும் பளிங்குச் சுண்ணாம்புக்கல்லும், பலநிறச் சலவைக்கற்களும், சாக்குக்கட்டியும் இந்தியாவில் நிறைய இருக்கின்றன.

---

### பிலிப்பைன் தீவுகளுக்குத் தபால்கள் அனுப்பலாம்

வர்த்தகக் கடிதங்களும் வரிதிப்புக்குட்பட்ட சாக்குகள் கொண்ட கடிதத் தபால்களும், மாதிரி சாமான் தபால்களும், தபால்- தந்தி இலாகா அட்டவணைப் பிரசுரத்தில் குறிப்பிட்டுள்ள விதிகளுக்குட்பட்டு, இப்பொழுது பிலிப்பைன் தீவுகளுக்கு அனுப்பலாமென்று இதன் மூலம் பொதுஜனங்களுக்கு அறிவிக்கப்படுகிறது.

## தமிழிசையை ஆதரியுங்கள்

## மலாயா யூனியனில் அரிசி 3 கட்டி

சிங்கப்பூர், மலாயா யூனியன் ஆகிய பிரதேசங்களின் அரிசி ரேஷன் மிகவும் குறைக்கப்பட்டு விட்டதென்று அறிவிக்கப் பட்டிருக்கிறது. புதிய ரேஷன் விகிதம் வருமாறு:-

சிங்கப்பூர் - ஆண்கள் தற்போதைய 2¼ கட்டிகளுக்குப் பதிலாக தலா வாரமொன்றுக்கு 1½ கட்டிகள்.

பெண்கள் -முந்திய 1½ கட்டிகளுக்குப் பதிலாக தலா வாரமொன்றுக்கு 1 கட்டி.

குழந்தைகள் தலா வாரமொன்றுக்கு 3/4 கட்டி (மாற்றமில்லை)

மலாயா யூனியனில் தலா வாரமொன்றுக்கு சராசரி ¾ கட்டியாக குறைக்கப்பட்டுள்ளது.

கடின உழைப்பாளர்களுக்கு தற்போது அளிக்கப்பட்டு வரும் பிரத்தியேக ரேஷன் புதிய விகிதத்தின் பிரகாரம் 2 கட்டியிலிருந்து தலா வாரமொன்றுக்கு 1½ கட்டியாகக் குறைக்கப்படும்.

ஆயினும் ஆஸ்பத்திரிகளுக்கு அளிக்கப்படும் ரேஷன் முன்போலவே யிருந்துவரும். அடுத்த திங்கட்கிழமை முதல் புதிய விகிதம் அமுலிலிருந்து வரும்.

'ஸ்தல அதிகாரிகளால் சமாளிக்க முடியாத நிலைமைகளின் காரணமாகவே அரிசி ரேஷன் குறைக்கப்படவேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டு விட்டதென்றும் கூடிய விரைவில் இந்தக் குறைவு நிவர்த்தி செய்யப்படுமென்றும், சிங்கப்பூர், மலாயா, யூனியன் சர்க்கார்கள் அறிக்கைகள் வெளியிட்டன.

இதற்கிடையே மலாயா யூனியனில், நெருக்கடியான அரிசி இறக்குமதி நிலைமையை உத்தேசித்து சர்க்கார், நெல்லுக்கு ஒரு நிர்ணயமான விலையளிக்க உத்தரவாதமளிப்பதெனத் தீர்மானித்துள்ளனர். இந்த விலைவாசிகள் 1949-ம் வருடம் ஜூலை மாதம் 31ந்தேதி வரை 3 வருட காலம் தொடர்ந்து அமுலிலிருந்து வரும். சிங்கப்பூர் அரிசி ரேஷன் ஏறக்குறைய ஆண்களுக்கு 40 சதவிகிதமும் பெண்களுக்கு 30 சதவிகிதமும் குறைக்கப்பட்டுள்ளது. தற்போதைய புதிய ரேஷன் விகிதப்பிரகாரம் ஆண்களுக்கு தலா மாதமொன்றுக்கு 5 கட்டியும் பெண்களுக்குத் தலா மாதமொன்றுக்கு 4 கட்டியும் அளிக்கப்படும்.

மலாயா யூனியனில், கடின உழைப்பாளர்களுக்குத் தற்போது அளிக்கப்பட்டுவரும் பிரத்தியேக அரிசி ரேஷன் புதிய விகிதப் பிரகாரம் 2 கட்டியிலிருந்து தலா வாரமொன்றுக்கு 1½ கட்டியாக குறைக்கப் படும். 'கேன்டீன்'களுக்கு அளிக்கப் படும் அரிசி விநியோகத்தில், வாரமொன்றுக்கு 2 நாட்கள் அரிசி சப்ளையை நிறுத்தும் திட்டத்தைக் கொண்டு வருவதன் மூலம், அரிசி மிச்சப்படுத்தப் படும்.

மலாயாவின் அரிசி நிலைமையானது சப்ளைக் கப்பல்களின் துரித வருகையையும், சரக்கு இறக்குமதிக்குப் பின் மீண்டும் சரக்குகள் கொண்டு வரக் கப்பல்கள் அனுப்பப்படுவதையுமே பொறுத்திருக்கிறதென இரு சர்க்கார்களும் வலியுறுத்திக் கூறுகின்றன.





## ஹரப்பாவில் பழங்கால ஆராய்ச்சி

---(o)---

சிந்து சமவெளி நாகரிகத்துக்கும் மெசபொடேமிய நாகரிகத்துக்கும் இருந்த தொடர்பை நிரூபணம் செய்யக்கூடிய அறுதியான அத்தாட்சியாக விளங்குகிற புதிய விஷயங்கள் ஹரப்பாவில் இந்தியப் பழமை ஆராய்ச்சி இலாகாவினுல் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாக அவ்விலாகாவின் டைரெக்டர் ஜெனரலான டாக்டர் மார்டிமர் வீலர் பழமை ஆராய்ச்சி மத்திய ஆலோசனைச் சபைக்குச் சமர்ப்பித்துள்ள அறிக்கையில் கூறுகிறார்: 1945-ல் நிறுவப்பட்ட ஷை சபையின் மூன்றுவது அரை வருஷக் கூட்டம் புது டில்லியில் செப்டம்பர் 10-உ யன்று, கல்வி-கலை இலாகா அங்கத்தினர் கனம் சர் ஷாபத் அஹ்மத் கான் வரமுடியாத நிலையில், டாக்டர் சியாம் பிரசாத் முகர்ஜியின் தலைமையில் நடைபெற்றது.

ஹரப்பா அகழ்ந்தெடுப்பினுல் இரண்டு அதிமுக்கியமான விஷயங்கள் வெளிப்பட்டிருக்கின்றன. ஒன்று ஒரு சவக்குழி. இந்தியாவில் இத்தகைய குழி முதன்முதலாக இப்போதுதான் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதில் புதைக்கப்பட்டிருந்த உடல் புல்லினுலான போர்வையால் மூடப்பட்டு, பல பல மண்பாண்டங்கள் சுற்றிவர இருக்கும்படி ஒரு மரச் சவப்பெட்டியில் வைக்கப்பட்டிருந்தது. இந்தவிதமான சவ அடக்க முறையும் அதே காலத்தில் மெசபொடேமியாவில் நடப்பிலிருந்த சவ அடக்க முறையும் முற்றிலும் ஒருப்போலவே இருப்பதால் அந்த இரண்டு நாகரிகங்களுக்கும் இருந்த தொடர்பும், இப்படியோ அப்படியோ ஒன்று மற்றொன்றைத் தழுவியிருந்த நிலையும் இறுதியாக நிருபணமாகிவிட்டது. ஹரப்பாவின் பிரதான மேடு இருந்த இடத்தில் 40 அடி திண்ணமும் 40 அடி உயரமும் உள்ள பச்சைச் செங்கல் கோட்டை மதில் ஒன்று இருந்ததாகவும் அதற்கு வெளிப்புறத்தில் சுட்ட செங்கலாலான சுவர் ஒன்று சுற்றிவர இருந்ததாகவும் தெரியவந்திருக்கிறது. இதிலிருந்து, மொகஞ்சதாரோவிலும் மத்தி மேடு இருந்த இடம் ஒரு கோட்டை இருந்த தளமாகத்தானிருக்கும் என்று அனுமானிக்க முடிகிறது. இந்த இரண்டு விஷயங்களையும் ஒருங்கே சேர்த்துக் கவனித்தால், மெசபொடேமியா, எகிப்து ஆகிய இடங்களிலிருந்த விறைப்பான, மத்திய அதிகாரமுள்ள, பிரபுத்துவ ஆட்சி முறைக்கும் சாந்தமும் ஓரளவு ஜனநாயகமும் கூடிய சிந்து சமவெளி ஆட்சி முறைக்கும் உள்ள வேறுபாட்டையேவலியுறுத்திக்காட்டுகிறது. சிந்து சமவெளி நாகரிகம் பற்றிய பாரம்பரியமான கோட்பாடு சரியல்லவென்று சொல்லக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடும். உண்மையில் முழு அமைப்பையும் பார்க்கையில், ஹரப்பாவும் மொகஞ்சதாரோவும் அவைகளின் சமகாலத்து நகரங்களான ஊர், லாகாஷ் ஆகியவைகளைப் போலவே, பூசாரிகளும் பூசாரி-மன்னர்களும் அதிகாரம் வகித்த பலமான கட்டுப்பாடுள்ள அதே முறைப்படிதான் அமைந்திருந்தன என்றே கூறும்படி இருக்கிறது.

பிரம்மாண்டமான கோட்டை கொத்தளங்கள் இருந்ததாகத் தெரிவதால், சரித்திர ஆசிரியர்களுக்கும் பழமை ஆராய்ச்சியாளருக்கும் ஒருங்கே முக்கியத்துவமுள்ள மற்றொரு முடிவும் அதிலிருந்து ஏற்படுகிறது. இந்திரன் அழித்தவையாக இருக்கு வேதத்தில் கூறப்பட்ட கோட்டைகள் இவையாக இருக்கலாமென்று டாக்டர் வீலர் தமது அறிக்கையில் குறிப்பிடுகிறார். இருக்கு வேதத்தில் இந்திரன் "புரந்தர" அதாவது கோட்டைகளை அழிப்பவன் என்று குறிப்பிடப்படுகிறான். "காலமானது ஆடைகளை எவ்வாறு கிழிக்குமோ அவ்வாறு அவன் கோட்டைகளைக் கீறுவான்" அனுமான அத்தாட்சிகளைக் கொண்டு இந்திரன் பழி சாட்டப்படுகிறான்" என்று டாக்டர் வீலர் கூறுகிறார். இந்திரன் அழிவு செய்த காலம் கி. மு. 1,500 என்று ஐதிகமாகக் கொள்ளப்பட்டு வருவதால், சிந்து சமவெளி நாகரிக முதிர்ச்சி அக்காலம் வரை எட்டியிருக்கவேண்டும் என்று அவர் யூகிக்கிறார். இந்தத் தசை கி. மு. 2,500 முதற்கொண்டு தொடங்கியிருக்க வேண்டுமென்று ஏற்கனவே வேறு அத்தாட்சிகளைக்கொண்டு அனுமானிக்கப்பட்டிருக்கிறது.

### சின்னங்களைப் பாதுகாப்பது

சென்ற ஆறு மாதங்களாகத் தமது இலாகா செய்துவந்த காப்பு வேலைத் திட்டம் பற்று விவரிக்கையில், கி.பி. 700 முதற்கொண்டு இருந்துவரும் பல்லவகால ஆதிக் கோயில்களான புகழ்மிக்க மகாபலிபுரம் கடற்கரைக் கோவில் கடலில் அமிழ்ந்து போகாதபடி பிறை வடிவமான கனத்த மதில் ஒன்று கடலில் கட்டப்பட்டிருப்பதை டாக்டர் மார்டிமர் வீலர் குறிப்பிட்டார். அம்மதில் அலைகளின் வேகத்தைத் தடுப்பதுடன் நீர்த்துளிகளையும் மட்டுப்படுத்துகிறது. வெயிலும் மழையும் பனியும் தாக்கி வருவதால், அக் கட்டிடம் உள்ளிடான கல் மட்டுமே எஞ்சிய நிலையில் இருக்கிறது. ஆனுல், அதன் அழிவு, இப்பொழுது தடுக்கப்பட்டுவிட்டது. தஞ்சாவூர் பிரகதீஸ்வரர் கோவில் உள் மண்டபத்தைச் சுற்றிவர அழிந்துபோகும் நிலையில் இருந்த சுவர்ச் சித்திரங்களும் [அனந்தப்பூர்] லேபாக்ஷியிலுள்ள வீரபத்திரர் கோவில் மண்டப உச்சித் தளத்தில் வரையப்பட்டிருந்த 16-ம் நூற்றுண்டைய விஜய நகர சாம்ராஜ்ய காலச்சித்திரங்களும் இப்போது இவ்விலாகாவின் ரசாயன நிபுணரது மேற்பார்வையில் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இந்து சிற்ப வேலை உருக்கொள்வதற்கு ஆதிஜனன ஸ்தலங்களுள் ஒன்றுக இருந்ததெனக் கருதப்படுகிற [பீஜப்பூரைச் சேர்ந்த] ஆதோலி என்னுமிடத்திலுள்ள ஆச்சரியமான பல கோவில் தொகுதிகளையும் இவ்விலாகா ஜாக்கிரதையாக காப்பாற்றி வருகிறது.

பாதுகாப்பு என்பதில், சின்னங்களைப் பழுது பார்ப்பது என்பதுடன் அவைகளின் சுற்றுப் புரங்களைத் துப்பரவு செய்வதுமடங்கும். [ஒரிசா] புவனேசுவரத்தில் இவ்விலாகாவின் மேற்பார்வையிலுள்ள 19 கோயில்களைப் பழுது பார்க்க வேண்டியிருந்ததுடன், பிரதான ஸ்தலத்தில் ஆக்ரமித்திருந்த ஒரு சேரியை அப்புறப்படுத்தவும் வேண்டியிருந்தது. பம்பாயருகேயுள்ள பிரம்மாண்டமான பஸ்ஸின் கோட்டை இடிந்து கிடக்கும் இடம் புதரடைந்து காடாகப் போகாதபடி திருத்தப்பட்டது. அங்கே, அதன் உட்புறத்தில் வைக்கப்பட்டிருந்த கள்ளுக்கடை ஒன்றைக் கட்டாயமாக அப்புறப்படுத்தவும் வேண்டியிருந்தது.

இந்த இலாகா மேற்கொண்டுள்ள ஸ்தலங் கண்டுபிடிப்பு ஆராய்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுகையில், "நான் இந்தியாவை விட்டுப் போவதற்கு முன், சர் ஆரெல் ஸ்டீன் சிறப்புற நடத்தி வந்த அடிப்படை வேலையான நில அளப்பு - ஸ்தலங் கண்டு பிடிப்பு நடவடிக்கை மீண்டும் தொடங்கப்படுவதைக் கண்ணால் பார்த்து விடலாமென்று நம்புகிறேன்" என்று டாக்டர் வீலர் சொல்லுகிறார். இவ்விலாகாவின் சரித்திர முற்கால ஆராய்ச்சியாளர் தென்னிந்தியாவில் கற்சிலைகள், தாழி புதைவிடங்கள் ஆகியவற்றை ஊக்கமாக ஆராய்ந்து வருகிறார். "அவரது முயற்சியின் முடிவை அறிவதற்காக உலக முழுவதிலுமுள்ள பழமையாராய்ச்சியாளர் ஆவலாகக் காத்திருக்கின்றனர் எனறு சொல்வது மிகையாகாது. அவர் மூளைந்துள்ள துறை இந்தியாவுக்கும் மேற்காசியா, வடஆபிரிகா, ஐரோப்பா ஆகிய பிரதேசங்களுக்கும் தொடர்பேற்படுத்தக்கூடிய விஷயங்கள் பற்றியது. தொடர்பு விட்டுப்போன பல சங்கதிகளை விளக்குவதற்கான விஷயங்கள் அனேகமாய் இந்தியாவிலிருந்து தெரியக்கூடும்" என்று டாக்டர் வீலர் கூறுகிறார்.

பிரஸ்தாபகால அளவில் இந்த இலாகா வெளியிட்டவற்றுள் பண்டை இந்தியா என்றபிரசுரத்தின் இரண்டாவது இதழும் ஒன்று. அதில் சென்ற வருஷம் புதுச்சேரியில் இவ்விலாகா நடத்திய அகழ்ந்தெடுப்பு ஆராய்ச்சி பற்றிய ஒரு கட்டுரை வெளியாகியிருக்கிறது. "தற்கால அறிவியல் ரீதியான ஆராய்ச்சிக்கு ஒத்த பழைமை ஆராய்ச்சி விஷயங்கள் இந்தியாவில் முதன் முதலாக இப்போது தான் வெளியிடப்பட்டிருக்கின்றன என்று சொல்வதைத் தவிர வேறெதுவும் இதைப்பற்றி நான் இப்போது சொல்லப்போவதில்லை" என்றார்.

கலை, பழமை, ஆராய்ச்சி, மனித சாஸ்திரம் ஆகியவை சம்பந்தமான தேசியப் பொருட்காட்சிச் சாலை பற்றிய குவையர் கமிட்டி அறிக்கை இச்சபையின் முன் வைக்கப்பட்டது. இந்தியாவுக்கு வெளியே உள்ள, முக்கியமாக யுத்த பிற்கால- புனருத்தாரண வேலைகளை மேற்கொண்டிருக்கும் ஆசிய, ஐரோப்பிய நாடுகளின் சர்வகலாசாலைகளில் உள்ள, நூல் நிலயங்களுக்கு அனுப்புவதற்கான இந்தியப் பழைமை ஆராய்ச்சி பற்றிய சிறந்த நூல்களின் நூல் தொகைப் பிரசுரம் ஒன்று எப்படியிருக்க வேண்டுமென்று சபை நிர்ணயித்தது. அதில், இந்தியப் பழைமை ஆராய்ச்சி பற்றிய ஒரு சில நூல்களாவது இருக்க வேண்டுவதவசியமாகையால், வெளிநாடுகளிலுள்ள நூல் நிலைய அதிகாரிகளுக்கு சகல விஷயங்களையும் பற்றிக் கூறக்கூடியதாகவும் அங்கீகரிக்கக்கூடியபடி சிறப்புடையதாகவும் உள்ள புஸ்தகங்களாகப் பார்த்து இச்சபை சிபாரிசு செய்திருக்கிறது.

---

### நோட்டீஸ்

தேவகோட்டை சப் கோர்ட்டு

S. C. No. 18 of 1946

| | |
|---|---|
| R. ஷண்முக ராஜேஸ்வர சேதுபதி (Alias)நாகநாத சேதுபதியவர்கள் பவர் பெற்ற திவான் மூலம் | வாதி |
| அதங்குடி சாமிநாத உடையார் என்று முத்துவேலு உடையார் குமாரர் சேவுரப் பெருமாள் உடையார் | 2 வது பிரதி வாதி |

வாதியவர்களுக்கு வரவேண்டிய அரசூர்நற்கனி கிரமம் பொருப்பு வகையரு பாக்கி ரூ. 674-0-7 வரப்பற்ற தங்கள் வகையருபேரில் பிருது செய்து 23-9-46-ந் தேதி வாய்தா ஏற்படுத்தியிருக்கிறார்கள். எதிர்வாதமிருந்தால் ஷை வாய்தாவன்று பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டுமுன் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம். தவறினுல் எக்ஸ்பார்ட்டியாக தீர்மானிக்கலாகும்.

தேவகோட்டை 11-9-46 } V. திருமலை ஐயங்கார், வக்கீல்

---

### புதுக்கோட்டையில் உணவுப்பொருள் நெருக்கடி

ரயில்வே வேலை நிறுத்தங்காரணமாக மாதாந்தரக் கோட்டா பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து வாராததால் சமஸ்தானத்தில் உணவுப் பொருள் நெருக்கடி அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. தர்பாரிலுள்ள பச்சை, புழுங்கல் அரிசி, சோளம் இருப்பு ஒரு நாள் தேவைக்குக்கூடப் போராது என்று தெரிகிறது. ரேஷன் கார்டு பெற்றிருப்பவர்கள் வெறுங்கையாக கடையிலிருந்து திரும்புகிறார்கள். கூடிய சீக்கிரம் உணவுப்பொருள் வந்திறங்கினவுடன் சப்ளை செய்யப்படுமென்றும் உறுதி கூறப்படுகிறது. லாரிகள் மூலம் சமஸ்தானத்திற்குள் மூட்டைகளைக் கொண்டு வர முயற்சி எடுக்கப்பட்டு வருகின்றன. சென்ற வாரம் 200 டன் சோளம் ரயில்வே ஸ்டேஷனில் இறக்குமதி செய்யப்பட்டது. இவைகள் வெளியூருக்கு விநியோகிக்கப்பட்டன. அரிசி கிடைக்கவில்லையென்று வெளியூர்களிலிருந்து புகார்கள் வந்து குவிந்த வண்ணமிருக்கின்றன.

---

### ராமனுதபுரம் ஜில்லாபோர்டு

ராமனுதபுரம் ஜில்லா போர்டின் கூட்டமொன்று சென்ற வாரம் ராவ் பகதூர், ஆர். வி. ராமசுந்தரம் பிள்ளை தலைமையில் கூடியது. ஜில்லாபோர்டு தலைவராகவும் அங்கத்தினராகவும் தொடர்ந்து பதவி வகிக்க சம்மதமின்மையைத் தெரிவித்திருக்கும் லெட்டரை புனராலோசனை செய்யும்படி ராமனுதபுரம் ராஜாவைக் கேட்டுக் கொண்டும் மண்டபத்தில் ஒரு முசாபரி பங்களாக் கட்ட ஒரு இடத்தை அக்வயர் செய்வதென்றும் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

## ராணுவஸ்தர்களின் குடியேற்றத் திட்டம்

ராணுவப் படைகலேந்து வருபவர்களின் ஷேம நலத்தை விருத்தி செய்வதற்காகவும் இந்தியாவின் விவசாயத் துறையை அபிவிருத்தி செய்வதற்காகவும் நிலக் குடியேற்றச் சங்கங்கள் இந்தியாவின் பல மாகாணங்களிலும் ஏற்படுத்தப்பட்ட் போகின்றன. மாஜி ராணுவஸ்தர்கள் கூட்டுறவு ரீதியில் வேலை செய்யக்கூடிய குடியிருப்புக்களை ஏற்படுத்துவதற்கான நிலங்களை சர்க்கார் தற்போது சுவாதீனம் செய்து திருத்தி வருகின்றனர். இத் திட்டம் விவசாயத்துறையில் ஏற்பட்டுள்ள அதி நவீனமான முற்போக்கு அம்சங்கள் பற்றிய அறிவு பரவுவதற்கும் காரணமாக இருக்கும். சமுதாயத்துக்கு ஆக்கவுண்டு பண்ணக்கூடிய வேலைகளை மேற்கொள்ளுவதில் அதன் அங்கத்தினர்களுக்கு ஊக்கமளிக்கப்படும். சிக்கனம், சுய உதவி, தமக்குள்ளேயே ஒத்துழைப்பு ஆகியவைகளை விருத்தி செய்வதற்கும் அவர்கள் தூண்டப்படுவார்கள். நிலம், கூட்டுறவு சங்கத்துக்குத் தான் சொந்தமாக இருக்குமே தவிர, தனி நபருக்குச் சொந்தமாயிராது. ஆனால், அவர் மூன்று வருஷத்துக்கு மேற்பட்டதொரு கால அளவுக்கு நிலத்தைப் பயிரிட்டு வருவாரேயானால், அவருக்கு நிலத்தின் மேல் பூரண அனுபவ பாத்தியதை ஏற்பட்டுவிடும். அவர் அப்படிச் செய்யத் தவறினால், இயல்பாகவே அவர் அங்கத்தினர் உரிமையை இழந்துவிடுவதுடன். அவர் வசமிருந்த நிலமும் ஒரு புதிய அங்கத்தினருக்குக் கொடுத்துவிடப்படும். பிரஸ்தாப குடியிருப்பு எந்த மாகாணத்தில் அமைந்திருக்கிறதோ அந்த மாகாண வாசிகளாகவிருக்கும் மாஜி ராணுவஸ்தர்கள் தான் அச் சங்கத்தில் சேர்க்கப்படுவார்கள். அப்படிச் சேருபவருக்குச் சொந்தமாக வேறு நிலமும் இருக்கக் கூடாது. யுத்தத்துக்கு முன்பு அவர் விவசாயத்தில் ஈடுபட்டவராக இருந்திருக்க வேண்டுவதுடன், ராணுவத்திலிருக்கும்போது விவசாயப் பயிற்சி முறை பயின்றவராகவும் இருக்க வேண்டும். ஷை நிலத்தில் குடியேறி ஒரு கூட்டுறவுக் குடியிருப்பு சமுதாயத்தில் அங்கத்தினராக இருப்பதற்கு அவர் ஒத்துக்கொள்ள வேண்டும். குடிவாரத்தார்கள் ஷை நிலத்தில் குடியேறுவதற்குப் பிடிக்கும் செலவைக் கொடுப்பதற்கு உதவும் பொருட்டு, மாகாண, மத்திய சர்க்கார்களிடமிருந்தும் யுத்த பிற்கால ராணுவப் புனருத்தாரண நிதியிலிருந்தும் நன்கொடைகள் கிடைக்கும். குடியேறுபவர் ஒவ்வொருவரும் மூலதனப் பங்காக 500 ரூபாய் கொடுக்கவேண்டும். அவர்களில் பலர் இத்தொகையை உடனடியாகக் கொடுக்க முடியாதவர்களாக இருப்பார்கள் என்பது உணரப்படுகிறது. ஆனல் அவர்கள் 50 ரூபாய் பங்கு ஒன்றை வாங்கச் சித்தமாக இருந்தால், மீதத் தொகைக்கு வேண்டிய பணத்தைக் கடனாகக் கொடுக்க வழி செய்யப்படும். அக் கடனைக் குறைந்த வட்டியுடன் பல வருஷ காலத்தில் செலுத்தித் தீர்த்துக்கொள்ளலாம்.

—

நேமத்தான்பட்டி

இவ்வூர் கிராம காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் பொதுக் கூட்டம் நேத்தாஜி நிலையத்தில் பெ. ராம. ராமசாமி அம்பலம் அவர்கள் தலைமையில் கூடி, நடப்பு ஆண்டிற்கு நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களாக எழுவர்களை நியமித்திருக்கிறது.

## இந்தியாவில் அரக்கு உற்பத்தி

1946-ம் வருஷ, "பைஸாகி", 'ஜெத்வா" கோடை அரக்குப் பயிர்கள் பற்றிய இறுதி அறிக்கை இப்பொழுது கிடைத்திருக்கிறது.

வெப்பம் மிதமாக இருந்தமையாலும் சிற்சில சமயங்களிலேயே மழை பெய்தமையாலும். அரக்கு பயிராகும் முக்கியமான எல்லாப் பிரதேசங்களிலும், அரக்கு அடை பிடிப்பதற்கு சாதகமான சீதோஷ்ண நிலைமை இருந்துவந்தது. இது காரணமாக, உற்பத்தியின் இறுதி உத்தேச மதிப்பில் மேலும் கொஞ்சம் உயர்வேற்பட்டது. சென்ற பத்து வருஷத்தில், இந்த வருஷக் கோடையில்தான் மிக அதிகமாக உற்பத்தியாகியிருக்கிறது. அடை அரக்கும் கோடைகாலத்தில் வெப்பத்தால் பாதிக்கப்படாமல் பத்திரமாகப் பாதுகாக்கப் பட்டிருக்கிறது.

உற்பத்தி இவ்வளவு அதிகமாக இருந்தும் அரக்கின் விலை, கடந்த மூன்று அல்லது நான்கு மாதகாலத்தில் மிக அதிகமாக உயர்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

பைஸாகி ஜெத்வி அரக்குப் பயிர்களின் உத்தேசக் கணக்கு விவரம் (கொம்பரக்காக மணங்குக் கணக்கில்)கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. முந்திய ஐந்து வருஷச் சராசரிக் கணக்கு பைஸாகியில் 7,38,000 மணங்கும் ஜெத்வியில் 60,350 மணங்குமாகும்.

—

அரிசிப் பங்கீடு குறைக்கப்படுகிறது

அரிசியை மிச்சப்படுத்தும் நோக்கத்துடன், வங்காளமும், ஐக்கிய மாகாணமும், அடிப்படை உணவு தானியப் பங்கீட்டிலும், அதிகப்படி உணவு தானியப் பங்கீட்டிலும், அரிசியின் அளவை சமீபத்தில் குறைத்திருக்கின்றன. இதுவரை, வங்காளம் கிழக்கு, மத்திய ஐக்கிய மாகாணம். டேராடூன் ஜில்லா ஆகிய இடங்களில் தினப்படி உணவுப் பங்கீடான 12 அவுன்ஸ் தானியத்தையும் அரிசியாகவே பெற்றுக்கொள்ளலாமென்றிருந்தது. இந்தப் பிரதேசங்களில் அரிசிப் பங்கீடு முறையே 8, 6, 4, 5 அவுன்சுகளாக இப்பொழுது குறைக்கப்பட்டிருக்கிறது. மேற்கு மத்திய மாகாணத்தில் சாதாரணமாக அரிசியைவிடக் கோதுமையே அதிகமாக உபயோகிக்கப்பட்டுவருகிறது. இந்தப்பிரதேசத்தில் ஒரு நபருக்கு உயர்ந்த பட்சம் அனுமதிக்கப்படும். அரிசியின் அளவு 8 அவுன்ஸிலிருந்து 0 அவுன்ஸாகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

கடுமையான சரீர உழைப்பாளிகளுக்கு அளிக்கப்படும் அதிகப்படி உணவு தானியப் பங்கீட்டில் அரிசியின் அளவு, வங்காளத்தில் தினப்படி 4 அவுன்ஸிலிருந்து 2 அவுன்சுக்குச் சற்று அதிகமாகவும், மேற்கு ஐக்கிய மாகாணத்தில் 2 அவுன்ஸிலிருந்து ஒரு அவுன்ஸாகவும் குறைக்கப்பட்டிருக்கிறது. ஐக்கிய மாகாணத்தின் பிற பாகங்களில் அதிகப்படிப் பங்கீட்டில் அரிசி கொடுக்கப்படுவதில்லை.

—

சென்னைக்கு கோதுமைக் கப்பல்

எஸ். எஸ். ஸ்டான்ரெல்ம் என்ற கப்பலில் சென்னை மாகாணத்துக்கு ஒதுக்கப்பட்ட 6000 டன் கோதுமை செப் 14ந்தேதி சென்னைத் துறை முகத்துக்கு வந்து சேர்ந்திருக்கிறது.

## காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம்

சென்னையில் திரு. காமராஜ் தலைமையில் காங்கிரஸ காரியக் கமிட்டிக் கூட்டம் செப் 12 ல் கூடியது. பண்டித ஜவஹர் தலைமையில் அமைக்கப்பட்ட இடைக்காலச் சர்க்காரை வரவேற்று ஒரு தீர்மானம் செய்யப்பட்டது.

சமீபத்தில் நடைபெறவிருக்கும் ஜில்லாபோர்டு, நகரசபைத் தேர்தலுக்கு நிற்கும் அபேட்சகர்களை பொறுக்கியெடுக்க அடியிற்கண்ட கமிட்டி ஒன்று நிறுவப்பட்டது. திருவாளர்கள் காமராஜ், உபயதுல்லா முத்துரங்க முதலியார் ராமசாமிரெட்டியார், எஸ். வெங்கட்ராமன் ஓ. வி. அழகேசன், கோவைசுப்பிரமணியம். தேனம் பேட்டையில் காதி. சுதேச பொருட்காட்சிச்சாலை ஒன்று டிசம்பர் ஜனவரியில் நடத்துவதென்று தீர்மானிக்கப்பட்டது. பழைய காங்கிரஸ் மாளிகை இடத்தில் ஒரு கட்டிடம் கட்டி காலஞ்சென்ற சத்தியமூர்த்தியின் பெயரால் ஒரு மண்டபம் கட்டவும் வேண்டிய நிதியைத் திரட்டவும் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அடுத்த மாதத்தில் மதுவிலக்கு அமுலுக்கு வருவதால் அதை மாகாணமெங்கும் சிறப்பாகக்கொண்டாடத் தீர்மானிக்கப்பட்டது.

—

ஹிந்தி, பாடத்திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படும்

சென்னை மாகாணத்தில் உள்ள பள்ளிக்கூடங்களில் வேலை செய்யும் ஹிந்தி பண்டிதர்களை பர்மனென்ட் செய்யும்படியும் அவர்களுக்கு ஒழுங்கான சம்பளத்திட்டத்தை அமைக்கும்படியும் பள்ளிக்கூடங்களுக்கு சர்க்கார் உத்திரவிட்டிருக்கிறது. மேலும் ஹிந்தியை பாடத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ளும்படியும் உத்திரவிடப்பட்டிருக்கிறது.

—

உணவு நிலைமையைப் பார்க்க ராஜேந்திர பிரசாத் வருகிறார்

இடைக்கால சர்க்கார் உணவு இலாக்கா மந்திரியான டாக்டர் பாபு ராஜேந்திரப் பிரசாத் கொச்சிக்கு உணவு நிலைமையைப் பார்த்து விவாதிக்க அக்டோபர் 12ந் தேதி சென்னையிலிருந்து விமான மூலம் வருகிறார். அது சமயம் தென்னாட்டிக்கும் பல இடங்களுக்கு விஜயம் செய்வார் என்று தெரிகிறது.

—

வங்க மந்திரி சபை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

வங்காள மந்திரி சபை மீதும் பிரதமர் சுஹர்வர்த்தி மீதும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களால் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அத் தீர்மானம் செப்டம்பர 19, 20 தேதிகளில் விவாதிக்கப்படும்.

—

மில்துணி விநியோகம் ஜவுளி கமிஷனர் அறிக்கை

சென்னை மாகாண டெக்ஸ்டைல் கமிஷனர் பின்கண்ட அறிக்கையை விடுத்திருக்கிறார்:—

வெளி ஜில்லாக்களில் உணவு ரேஷன் கார்டு இல்லாதவர்கள் மில் துணி வாங்க இஷ்டப்பட்டால் அந்தந்த ஊர் ஹெட்மென்னிடம் ரேஷன் கார்டு இல்லை என்ற அத்தாட்சியுடன் குடும்பத்திலுள்ள நபர்கள், பெயர் விலாசத்துடன் அடையாளச் சீட்டுப் பெறவேண்டும். இந்தச் சீட்டுப் பெற்றிருப்பவர்களுக்குத்தான் மில்துணி கொடுக்கப்படும், சில்லரை வியாபாரிகளுக்கும் இவ்வாறு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## காஷ்மீர் எல்லையில் ரஷ்யப் படை

காஷ்மீர் எல்லையில் ரஷியப் படைகள் குவிந்திருக்கின்றனவென்ற ஒரு பரபரப்பான செய்தி 'பிரதாப்' என்ற ஒரு காஷ்மீர் தினசரி பத்திரிகையில் வெளியிடப்பட்டிருக்கிறது.

—

சகோத்திர விவாகம் சட்டசபையில் மசோதா

சென்னை அசம்பிளி மெம்பர் திரு. வ. காளேஸ்வரராவ் இந்துக்களுக்குள் ஒரே பிரவரம் அல்லது கோத்திரத்துக்குள் விவாகத்தை நடத்த அனுமதிக்கும் சம்பந்தமாக ஒரு மசோதாவை சட்டசபையில் கொண்டுவருவார்.

—

உணவுப்பொருள் இறக்குமதி

சென்னை மாகாணத்துக்கும் திருவாங்கூர், கொச்சி சமஸ்தானத்துக்கும் வினியோகம் செய்ய 3100 டன் வெளிநாட்டு உணவுப் பொருள்கள் கொச்சித் துறைமுகத்தில் இறங்கியிருக்கின்றன.

### நோட்டீஸ்

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

O. S. No. 239 of 1945

இராமனுதபுரம் ராஜா அவர்கள் பவர்பெற்ற திவான் மூலம் } வாதி

தேவகோட்டை நா. முரு. நா. நாகப்ப செட்டியார் } 2-ம் பிரதிவாதி

வாதியவர்களுக்கு தாங்கள் வகையரு செலுத்தவேண்டிய கூனவயல் வகையரு கிராமங்களின் 1353, 1354 பசலி பொருப்புவகையரு பாக்கி கூடுதல் தொகை ரூ. 2476-7-0 வரப்பற்ற ஷை பிராது செய்து 30-9-46-ந் தேதி வாய்தா ஏற்படுத்தியிருக்கிறார்கள். எதிர்வாதமிருந்தால் ஷை வாய்தாவன்று பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டுமுன் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம். தவறினல் எக்ஸ் பார்ட்டியாக தீர்மானிக்கலாகும்.

தேவகோட்டை 11-9-46 } V. திருமலை ஐயங்கார், வக்கீல்





## ஆசிரியர்களின் பஞ்சப்படி

ஸ்தல ஸ்தாபனங்களில் உள்ள பள்ளி ஆசிரியர்களுக்கு 1944 ஜுலை முதல் டிசம்பர் 31 வரை பாக்கியுள்ள பஞ்சப்படியை ரிசர்வ்நிதி பணத்திலிருந்து கொடுத்துவிடும்படி சர்க்கார் உத்திரவிடுமென்று தெரிகிறது. 40-க்குக் குறைவாகச் சம்பளம் வாங்கும் ஆசிரியர்களுக்கு ரூ. 18 வீதமும் 40-க்கு மேற்பட்டு வாங்கும் ஆசிரியர்களுக்கு ரூ. 16 வீதமும் கொடுக்கப்படும்.

—

புதுக்கோட்டை தர்பார் உணவு வினியோகத்தை ஏற்கும்

சர்க்கரை உள்பட எல்லா உணவு வினியோகத்தையும் புதுக்கோட்டை சர்க்காரே ஏற்று நடத்தும். சமஸ்தானத்தில் மொத்த வியாபாரிகளுக்குக் கொடுக்கப்பட்டிருந்த கோட்டாவை சர்க்கார் ரத்துச் செய்து விட்டார்கள். கோடியான பார்வையில் நகரில் ஒரு மத்திய கிட்டங்கியை சர்க்கார் நிறுவியிருக்கிறார்கள்.

### நோட்டீஸ்

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

O. P. No. 43 of 46

கருப்பையா சேர்வை (1) } மனுதார்கள்
நடேசன் சேர்வை (2) }

கிருஷ்ணன் சேர்வை—எதிர் மனுதார்

ஷை மனுதார்கள் தகப்பனர் லேட் சாவடி சேர்வை போரால் மதுரை பசுமலை மஹாலெக்ஷ்மி டெக்ஸ்டைல் மில்ஸ் லிமிடெட் ஷேர்கள் 5ஐ பொறுத்து மனுதார்கள் வார்சு சர்டிபிகேட் பெற மனுக்கொடுத்து 30-9-46உ வாயிதா போடப்பட்டிருக்கிறது.

ஆக்ஷேபணையுள்ளவர்கள் அன்று காலை 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளவும்.

தேவகோட்டை 16-9-46 } D. S. ராஜகோபால அய்யர், மனுதார்கள் அட்வகேட்

## ரேஷன் கார்டு பதிவு

அரிசிப் பங்கீடு கார்டுகளைப் பதிவு செய்த கடையிலேதான் சர்க்கரைப் பங்கீடு கார்டுகளையும் பதிவு செய்ய வேண்டுமென்று அரிசிப் பங்கீடு கடைக்காரர்கள் பொது மக்களை வற்புறுத்துவதாகச் சர்க்காருக்குப் புகார்கள் வந்திருக்கின்றன. இம்மாதிரி அதிகாரம் எதுவும் அரிசிப் பங்கீடு கடைக்காரர்களுக்குக் கொடுக்கவில்லை. இனியும் அவர்கள் இம்மாதிரி வற்புறுத்தினல் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும். சர்க்கரைப் பங்கீடுகள் வைத்திருப்பவர்கள் இஷ்டப்படி எந்தக் கடைகளிலும் பதிந்துகொள்ளலாம்.

—

கண்டவராயன்பட்டியில் உணவு நெருக்கடி

16-9-46 பிற்பகல் 4 மணிக்கு காரைக்குடி டாக்டர் சுப்பிரமணியம் எம். எல். ஏ. இவ்வூர் பணிச்சாருடையவர் தர்மகலாசாலையில் பிர்க்கா சப்ளை ஆபீசருடன் வந்து பொதுமக்களின் உணவுக் கஷ்டத்தை கேட்டுத் தெரிந்து கொண்டு அதற்கு தன்னாலியன்ற உதவிகள் செய்வதாக உறுதி கூறினர்.

—

வயிரவன்பட்டி

திரு. எஸ். கே. தாஸ் அவர்கள் இல்லத்தில் திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யங்காரவர்கள் தலைமையில் 11-9-46 ஒரு கூட்டம் கூடி 'ஜெய்ஹிந்த் வாசகசாலை' என்ற பெயரால் ஒரு வாசகசாலை நிறுவப்பட்டது. பதின்மூவர் கொண்ட ஒரு நிர்வாக் கமிட்டியும் அமைக்கப்பட்டது.

—

மணிக்கு 616 மைல் செல்லும் விமானம்

குரூப்காப்டன் எல். எம். டாண்ஸன் என்பவர் ஒரு கிளாஸ்டர் மெடியர் ஜெட் விமானத்தில் மணிக்கு 616 மைல் வேகத்தில் பறந்தார். உலகிலேயே இதுவரை யாரும் இவ்வளவு வேகமாக விமானம் ஓட்டினது கிடையாது

## மலாயா இந்தியக் காங்கிரஸ்

சென்ற ஆகஸ்ட் மீ 3. 4. 5. உகளில் அகில மலாய் இந்தியர்கள் மகாநாடு கோலாலம்பூரில் கூடி "மலாயன் இந்தியன் காங்கிரஸ்" ஸ்தாபதம் செய்திருக்கின்றனர். இந்த ஸ்தாபனம் ஈப்போ திரு. ஜே. ஏ. திவி அவர்களை தலைவராக பெற்றுளது. ஜே. ஏ. திவி அவர்கள் தமிழ் நாட்டில் பிறந்தவர். தன்னலமில்லாத தேச பக்தர். சுப்ரீம் கோர்ட் நீதிபதி பதவியைத்துறந்து நேதாஜீ தலைமையில் தோன்றியிருந்த இந்திய சுதந்திர சர்க்காரில் வெளிநாட்டு மந்திரியாக இருந்து பின்னர் பிரிட்டிஷார் ஆதிக்கத்தில் ஆறுமாதம் சிறைவாசம் புரிந்தவர். நேதாஜியோடு அத்தியந்த விசுவாசமுடையவர்களில் ஒருவர்.

—

லேட்சுமிபுரம் சோக்கலிங்க வித்தியாசாலை திலகர்விழா

13-9-46 வெள்ளிக்கிழமை பிற்பகல் 3-30மணிக்கு லெட்சுமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலையில் "திலகர்விழா" நடை பெற்றது. சொ. வி. மாணவ, மாணவிகளின் பாட்டு, பேச்சு, நடிப்பு, கும்மி நடை பெற்றபின் ஆசிரியர் திரு. மு. இராமநுஜம்பிள்ளை சொற்பொழிவு ஆற்ற குழந்தைகளுக்குத் தின்பண்டம் வழங்கப்பெற்று வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

—

சுண்டக்காட்டூரில் தீவிபத்து

14-9-46 அன்று மாலை கண்டவராயன் பட்டிக்கு அருகிலுள்ள சுண்டக்காடு என்னும் கிராமம் எதிர்பாராத விதமாய் தீ விபத்திற்குள்ளாகியது. சுமார் 200 குடும்பங்கள் உள்ள இக்கிராமத்தில் 150க்கு மேலான குடும்பங்கள் வீடு, சொத்து முழுவதையும் இத்தீவிபத்தால் இழந்தன. ஒரு வீட்டில் மட்டும் சுமார் ரொக்கம் ரூ 1500 இருந்து எரிந்து விட்டதாகத் தெரிகிறது. மிக ஏழைகள் வசிக்கும் இக்கிராமத்தின் தீவிபத்து மிகவும் பரிதாபகரமானதாகக் கருதுகிறார்கள். இதை அரசாங்கம் கண்ணுற்று இவ் வேழை மக்களுக்கு உதவி அளிக்க வேண்டுமென கண்டவராயன்பட்டி திரு. நா. அருணசலன் எழுதுகிறார்.

## ஜில்லாப் போர்டார் கவனிக்க

கண்டவராயன்பட்டியிலிருந்து மகிபாலன்பட்டி வழியாக நெற்குப்பை செல்லும் ரோடு 1937ல் தேசியப் பிரதிநிதியாக இருந்த திரு. வி. எஸ். ஆர். எம். வள்ளியப்ப செட்டியார் அவர்களின் அரிய முயற்சியில் ஜில்லா போர்டில் சேர்த்துக் கொள்ளப்பட்டு, மிகச் சீர் திருத்தம் அடைந்திருந்தது. அதன் நிலைமை இப்பொழுது சொல்லத்தரமன்று. ரோட்டில் முழங்கால் பள்ளமும் குறுக்கு மறுக்கான அறுத்தோடிகளும் உண்டாகி வண்டி கார் முதலியவைகள் போக்குவரத்துக்குத் தடையாக சீர் கேட்டைந்து வருகிறது. இதை ஜில்லா போர்டார் கவனித்து சீக்கிரத்தில் சீர்திருத்தம் செய்ய வேண்டு மெனக் கண்டவராயன் பட்டி திரு. நா. அருணசலன் எழுதுகிறார்

—

கம்பை

கம்பை தனவைசிய கல்விநிலைய மாணவர்கள் சங்கச் சார்பில் கல்வி நிலைய மண்டபத்தில், இந்திய தற்காலிக அரசாங்கம் டெல்லியில் 2-9-46ல் ஸ்தாபகமானதைக் கொண்டாடப் பெற்றது. கல்விநிலையப் பிரின்சிபால் உயர்திரு. நடராஜன் செட்டியார் அவர்கள் முகவுரைக்குப்பின், தலைமை உபாத்தியாயர் உயர்திரு. டட் எம் ஏ. பி. டி. அவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. அவ்வமையம் உயர்திரு. பாவா மியா பி. எஸ். ஸி. அவர்களும், தமிழ்ப் பண்டிதர் உயர் திரு. ரா. கனுங்கப்ப செட்டியாரவர்களும் சுதந்திரம், தேசப்பற்று, மாணவ மாணவிகள் கடமை, என்பது பற்றிப் பேசினர்கள். பர்மிய, இந்தியதேசிய கீதங்கள் பாடப் பெற்று, கூட்டம் இனிது முடிவுற்றது.

கம்பை, பக்டோ, கோக்கயின், ஆட்மயில் முதலிய இடங்களிலுள்ள மகாஜனங்களின் சௌகரியத்திற்காக கம்பை செட்டியார்கள் உயர்தரக் கல்விநிலையக் கம்பவுண்டில், 2-9-46ல் போஸ்டாபீஸ் திறக்கப்பெற்றிருக்கிறது. இங்கு மணியாடர் செய்வது வரையுள்ள எல்லா அலுவல்களும் கவனிக்கப்பெறும்.



One side page dark

# டில்லியில் மத்திய பொருட்காட்சி சாலை

டில்லியில் கலை, பழைமை ஆராய்ச்சி, மனித சாஸ்திரம் ஆகிய துறைகள் சம்பந்தமான மத்திய தேசிய பொருட்காட்சிச் சாலை ஒன்றை நிறுவுவதற்காக சர்க்காரால் அமைக்கப்பட்ட விசேஷக் கமிட்டி அதைச் சீக்கிரமாகவே ஸ்தாபிப்பதற்கான திட்டம் ஒன்றை வகுத்து முடித்து விட்டது.

டில்லி சர்வகலாசாலை உப அத்தியட்சகரான சர் மாரிஸ் குவையரை அக்கிராசனராகக் கொண்ட அக் கமிட்டி ஷை பொருட்காட்சிச்சாலை ஒரு மேற்பார்வை சபையும் ஐந்து இலாக்காக்களும் கொண்டதாக அமையவேண்டுமென்று சிபாரிசு செய்திருக்கிறது. 1 கலை; 2 சரித்திர காலத்துக்கு முந்திய பழைமை ஆராய்ச்சி, 3 சரித்திரகாலப் பழைமை ஆராய்ச்சி, 4 நாணயங்கள்-சிலைகள்-பட்டயங்கள் ஆராய்ச்சி, 5 மனிதசாஸ்திரம்-கலாசாரமும் உடல் தேற்றமும் என்பவைதான் ஷை ஐந்து இலாகாக்கள். இவைதவிர, சுற்றி வரும் இலாகா என்றும், நூல் நிலையம் ஒன்றும் ரசாயன ஆராய்ச்சிக் கூடம் ஒன்றும் இருக்கும்.

1912-ல் இந்தியாவில் கீழ்த்திசை ஆராய்ச்சி நிலையம் ஒன்றை ஸ்தாபிப்பதற்காக இந்தியா மந்திரியிடம் இந்திய சர்க்கார் வேண்டிக்கொண்ட காலம் முதற்கொண்டே இந்நாட்டில் இத்தகைய மத்திய ஸ்தாபனம் ஒன்றின் அவசியம் தீவிரமாக உணரப்பட்டு வருகிறது. பிற்கால உத்தியோக அறிக்கைகளிலும் இவ்வவசியம் பற்றி அடிக்கடி வற்புறுத்தப்பட்டு வந்தது.

இறுதியாக, 1945-ல், மத்திய தேசியப் பொருட்காட்சிசாலை ஒன்றை நிறுவுவதன் அவசியத்தை வற்புறுத்தி பழைமை ஆராய்ச்சி மத்திய ஆலோசனைச் சபை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி அதை இந்திய சர்க்காருக்கு அனுப்பி வைத்தது. அத் தீர்மானத்துக்கு சட்டசபைக் கல்வித்துறை நிரந்தரக் கமிட்டி ஆதரவளித்தது. இந்திய சர்க்கார் அச் சிபாரிசைக் கொள்கை அளவில் ஏற்றுக்கொண்டு, அமைப்பு விவரங்களை நிர்ணயம் செய்யும் பொருட்டு சர் மாரிஸ் குவையர் தலைமையில் பதினொரு பேர் கொண்ட கமிட்டி ஒன்றை நியமித்தனர். ஷை கமிட்டி கவனிக்கவேண்டிய விஷயங்களாகக் குறிப்பிடப்பட்டவைகளுள், பொருட்காட்சிச் சாலையின் பணி (அதிகாரம் முதலியவை) என்ன; பொது நிர்வாக, உள் விவகார அமைப்பு ஆகியவை எப்படியிருக்கவேண்டும்; அதை நிறுவுவதற்கான மனையிடமும் கட்டிடமும் எங்கு, எப்படியிருக்கவேண்டும் என்பவை அடங்கியிருந்தன.

மத்திய தேசியப் பொருட்காட்சிச் சாலையின் பிரதான நோக்கம் உலகில் மக்களின் நாகரிக வளர்ச்சிக்கு இந்தியா எப்படி உதவியிருக்கிறது என்பதை உலகோருக்கு எடுத்துக் காட்டுவதுதான். இந்நோக்கம் ஈடேற வேண்டுமானால், இந்தியாவின் கலை, கைத்தொழில்கள், கலாசாரம் ஆகியவை நாளிதுவரை எப்படி யெப்படி இருந்திருக்கின்றன என்று விளக்கிக் காட்டக்கூடிய சர்வவியாபகமான சின்னங்கள் ஷை சாலையில் எப்போதும் குறைவற இருக்கும்படி செய்ய வேண்டும். ஆனால், அதே சமயத்தில் இந்தியாவில் பொருட்காட்சிச் சாலைப் பராமரிப்பு முறையும் அது சம்பந்தமான ஊழியமும் சர்வதேச உயர் மட்டத்துக்கு ஒப்பாக இருக்குமாறு அவைகளைச் சீர்திருத்தவும் வேண்டும். எனவே, இத்திட்டத்தின் ஆரம்ப தசையில், டைரெக்டர் ஒருவரும் காப்பாளர் இருவரும் கொண்ட, நன்கு பயிற்சிபெற்ற முதல்படிச் சிப்பந்திகளை நியமிக்கவேண்டுமென்றும், ஷை காப்பாளர்கள் பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் உள்ள பொருட்காட்சிச் சாலைகளின் கட்டிட அமைப்பு நிர்வாக முறை, காட்சிக் கோப்பு முறை ஆகியவைகளை சவிஸ்தாரமாகத் தெரிந்துகொள்வது உட்படப் பல நுணுக்கங்களையும் அறிவதற்காக கவனமாகத் திட்டமிடப்பட்டபடி சுற்றுப் பிரயாணம் செய்துவருமாறு அவர்களை அனுப்பி வைக்கவேண்டுமென்றும் கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது.

ஷை பொருட்காட்சிச் சாலைக்கு இரண்டு விதமான பணி இருக்கிறது. அது ஆராய்ச்சி அபிவிருத்திக்கு உதவ வேண்டுவதுடன் சாதாரண மனிதனுக்கும் விஷயங்களைப் போதிக்க வேண்டும். இதற்குத் தகுதிவாய்ந்த பிரதம நூல் நிலைய அதிகாரியைத் தெரிந்தெடுப்பதன் அவசியத்தை கமிட்டி அழுத்தமாக வலியுறுத்திக் கூறியிருக்கிறது. ஷை அதிகாரி காட்சிச் சாலை வேலையின் சகல துறைகள் சம்பந்தமாகவும் வெளிவந்துள்ள நூல்கள், ஏடுகள் முதலியவைகளைப் பற்றி சிப்பந்திகளுக்கும் அங்கீகாரம் பெற்ற ஆராய்ச்சி மாணவர்களுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் சரியான தகவல்களைத் தந்து வழிகாட்டக் கூடியவராக இருக்கவேண்டும்.

மாணவர்கள் பொது ஜனங்கள் ஆகிய இருசாரார்க்கும் பயன்படக் கூடியபடி பள்ளிக்கூடங்களிலும் பிற இடங்களிலும் பொதுப்படையான பிரசங்கங்களைச் செய்து வருவதற்காக ஒவ்வொரு பிரிவுக்கும் ஒருவர் வீதம் விளக்க விரிவுரையாளர்கள் ஐந்துபேரை நியமிக்கவேண்டுமென்றும் கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. சுற்றிவரும் இலாகா ஒன்றை ஏற்படுத்துவதற்கான யோசனை இத் திட்டத்தில் மற்றொரு அம்சம். (லண்டன் விக்டோரியா—ஆல்பர்ட் பொருட்காட்சிச் சாலையில் உள்ளதைப் பின்பற்றி ஏற்படுத்தப்படும்) இவ்விலாகாவின் பிரதான வேலை, காட்சிப் பொருள்களை நகரங்கள், கல்வி நிலையங்கள் ஆகியவைகளுக்கு இரவலாக அனுப்பி வைப்பதற்காக அவைகளை வரன்முறையாக வகைப்படுத்தி அப்படி அனுப்பி வைப்பதாகும்.

இம்மாதிரியான இதர ஸ்தாபனங்கள் விஷயத்திலுள்ளதுபோல, இக் காட்சிச் சாலையின் நிர்வாகமும், சம்பந்தப்பட்ட சர்க்கார் இலாகாக்களின் பிரதிநிதிகளும், பல்வேறு தனித்தனி நலன்களைக் கவனிப்பதற்கான உத்தியோகச் சார்பில்லாத பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு நிர்வாகக் குழுவின் மேற்பார்வையில் இருக்கவேண்டுமென்று கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. ஷை நிர்வாகக் குழு அதற்காக இந்திய சர்க்கார் மொத்த நன்கொடை அளிக்கையில் அதையொட்டிக் கூறுகிற நிபந்தனைகள் தவிர மற்றப்படி சூய அதிகாரமுள்ள சபையாகவே இருந்து வரவேண்டும்.

இக் காட்சிச்சாலை புது டில்லியில் இருக்கும். அதற்கான மனையிடத்தைக் கமிட்டி தெரிந்தெடுத்துவிட்டது. பூராத் திட்டமும் மூன்று தனித் தனிக் கட்டங்களாக நிறைவேற்றப்படும். அது பூர்த்தியடைந்ததும் அதற்கு வருஷா வருஷம் சுமார் 8½ லட்சம் ரூபாய் செலவிட வேண்டிவரும் என்று மதிப்பிடப்படுகிறது.

---

### வயிரவன்பட்டி

இவ்வூரில் சிறுகூடல்பட்டி தேச ஊழியர் திரு. குப்பான் செட்டியார் என்ற எஸ். கே. தாஸ் அவர்கள் தலைமையில் காங்கிரஸ் பொதுக் கூட்டம் இரவு 8-30 மணிக்கு நடைபெற்றது.

பின் திருப்பத்தூர் திரு. K. கிட்டு ஐயரவர்களும், கோனபட்டு திரு. சோமசுந்தரம் செட்டியாரவர்களும் பேசினார்கள். ஜெய்ஹிந்த் கோஷத்துடன் கூட்டம் இனிது 9—30 மணிக்கு முடிவுற்றது. பகல் 11 மணிக்கு இவ்வூர் கோவிலில் தலைவர்கள் நீடூழி வாழவேண்டுமென்றும் பிரார்த்தனை, அபிஷேகம் பாத்தியா முதலியன நடைபெற்றன.

---

### ரயில்வே வேலை நிறுத்தம்

தென்னிந்திய ரயில்வே வேலை நிறுத்தத்தால் ரயில்வேக் கம்பெனிக்கு ரூ. 3 லட்சம் வருமானத்தில் குறைவு ஏற்பட்டிருக்கவேண்டுமென்று சுமாராகக் கணக்கிடப்படுகிறது.



Edited, Printed and Published by S. MURUGAPPA at the Pandian Press, Magalir Illam, Amaravathipudur.

